உ

கணபதி துணை.

கோவிலூர் மரபு

சிதம்பரம் பொன்னம்பல ஞானதேசிகர் மடாலயம்

சிதம்பர ஞானதேசிகரவர்களின் மாணாக்கர்

சி. சுப்பைய சுவாமிகளால்

மொழி பெயர்க்கப்பட்ட

# தருக்க சங்கிரகமும்

அதனுரையாகிய

## தருக்க சங்கிரக தீபிகையும்

---

நாகப்பட்டணந் தாலூக்கா மஞ்சக்கொல்லை

ராம. ச. இராமசாமி முதலியார் குமாரர்

ராம. ச. சம்பந்த மூர்த்தி முதலியாரால்

---

சென்னபட்டணம், ஜூனா

எவரெடி அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

ஸ்ரீ ஷண்முகப்பெருமான் நன்கொடை.

---

தாது ௵] 1936 [சித்திரை ௴

இப்புத்தகம் வேண்டுவோர் அடியிற்கண்ட இடங்களுக்கு எழுதி இனமாகப் பெறலாம்.

கோ. ஆ. உகந்தலிங்க ஞான தேசிகர் திருமடாலயம்,
பொருள்வைத்தசேரி, சிக்கல்.

ஈசானிய திருமடாலயம்,
திருவண்ணாமலை, வட ஆற்காடு.

கா. செ. வேதாந்த திருமடாலயம்,
காளையார் கோவில், இராமநாதபுரம் ஜில்லா.

ராம. ச. சம்பந்த மூர்த்தி முதலியார்,
மஞ்சக்கொல்லை, நாகப்பட்டணம்.

இங்ஙனம் இப் புத்தகத்தை ஸ்ரீ வல்லீ தேவசேனாம்பா சமேத சத்திவேல் ஷண்முகப் பெருமான் பிரீதியாய் அறியும் வேட்கையாளருக்கு நன்கொடையாக அளித்தருள வேண்டுமென்று உறுதி கொண்டவர் ஷை சம்பந்த மூர்த்தி முதலியாரின் பிதாவான உயர் திருவாளர் ராம. ச. இராமசாமி முதலியார் அவர்கள்.

உ

# வரலாறு.

வைதிக சாத்திரம், மீமாஞ்சை, நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், வேதாந்தம் என ஆறும். அவற்றுள், மீமாஞ்சை சைமினி முனிவரானும், நியாயம் கௌதம முனிவரானும், வைசேடிகம் கணாத முனிவரானும், சாங்கியம் கபில முனிவரானும், யோகம் பதஞ்சலி முனிவரானும், வேதாந்தம் வியாச முனிவரானும் சூத்திர ரூபமாகச் செய்யப்பட்டன. அவை தரிசனமெனவும் பெயர்பெறும். கௌதம முனிவர் அக்கபாதர் எனவும் பெயர்பெறுவர்.

அவற்றுள், நியாயம் வைசேடிகம் என்னும் இரண்டும் தருக்க நூலெனப்படும். இவற்றையும் இவற்றின் வழி நூல்களையும், வியாக்கியானங்களையும் நன்குணர்ந்த மகா பண்டிதராகிய அன்னம் பட்டர் ஏறக்குறைய இருநூற்று எழுபத்து மூன்று வருடத்துக்குமுன் தருக்க சங்கிரகம் எனப் பெயரிய ஒரு நூலும், அதற்குத் தருக்க சங்கிரக தீபிகை எனப் பெயரிய ஒரு வியாக்கியானமும் இயற்றினர். இவ் வன்னம் பட்டர் தெலுங்கர். இவர் மாபாடியத்துக்குக் கையடர் இயற்றிய வியாக்கியானத்துக்கு உரையுஞ் செய்தனர்.

இத் தருக்க சங்கிரகம் சிறுவரும் எளிதி னுணரும்பொருட்டு மிகச் சுருக்கிச் செய்யப்பட்டமையால், யாண்டும் தருக்க நூல் கற்கப் புகுவோர் யாவரும் முன்னர் இதனையே கற்கின்றனர். இதற்குப் பல வியாக்கியானங்கள் உள. அவற்றுள் :—

1, தருக்க சங்கிரக தீபிகை—இது நூலாசிரியராலேயே செய்யப்பட்டது. இதனை அன்னம்பட்டீயமென வழங்குவர். இது தருக்க சங்கிரகத்துக்குச் செய்யப்பட்ட வியாக்கியானங்கள் எல்லாவற்றுள்ளும் மிக அரிதி லுணர்தற்பாலது. இது முந்நூற்றைம்பது கிரந்த முடைத்து. இவ் வியாக்கியானத் துக்கு ஐந்து வியாக்கியானங்கள் உள. அவை; அநுமநீயம் 1, நீலகண்டீயம் 2, பட்டாபிராமீயம் 3, முகுந்த பட்டீயம் 4, தீபிகாப பிரகாசிகை 5 என்பனவாம்.

2. நியாய போதினி—இது கௌடரும் தருக்கபாஷாப் பிரகாசஞ் செய்தவருமாகிய கோவர்த்தன மிசிரராலே செய்யப் பட்டது. இது நானூறு கிரந்த முடைத்து.

3. நிருத்தி—இது தமிழ நாட்டிலிருந்த தெலுங்கராகிய பட்டாபிராம சாத்திரியாராலே தமது புத்திரியின் பொருட்டுச் செய்யப்பட்டது. தருக்க சங்கிரகத்துக்குள்ள வியாக்கியானங்கள் எல்லாவற்றுள்ளும் இது மிக எளிதி லுணர்தற்பாலது. இவர் ஏறக்குறைய தொண்ணூற்று மூன்று வருடத்துக்கு முன்னே தேகவியோக மெய்தினர். இந்நிருத்தி அறுநூறு கி.

4. சித்தாந்த சந்திரோதயம்—கிருஷ்ண தூர்ச்சடி தீக்ஷிதராலே செய்யப்பட்டது. தருக்க சங்கிரகத்துக்குரிய வியாக்கியானங்களுள் தருக்க சங்கிரக தீபிகை யொழிந்து, ஒழிந்த மற்றெல்லாவற்றினும் இது மிக அரிதி லுணர்தற்பாலது. இது ஆயிரத்து முந்நூறு கிரந்த முடைத்து.

5. தருக்க சங்கிரக சந்திரிகை—இது மகாராட்டிரராகிய முகுந்த பட்டராலே செய்யப்பட்டது. இது ஆயிரத்திருநூறு கிரந்த முடைத்து.

6. பத கிருத்தியம்—இது கௌட க்ஷத்திரியராகிய சங் கிரச் சிங்கராலே செய்யப்பட்டது. இது கங்கைக்கரையி லுள்ள நாடுகளிலே கற்பிக்கப்படுகின்றது. இது ஆயிரங் கிரந்த முடைத்து.

7. தருக்க சங்கிரகோபந்யாசம்—இது மகாராட்டிர சந் நியாசியாகிய மேரு சாத்திரியாராலே செய்யப்பட்டது. இது தார்க்கிகர்களாலே மிக நன்கு மதிக்கப்படுகின்றது. இது ஐஞ்ஞூறு கிரந்த முடைத்து.

இவ்வாறு சிறப்புவாய்ந்த தருக்க சங்கிரகத்தையும், தருக்க சங்கிரக தீபிகை என்னும் அதன் வியாக்கியானத்தை யும், திருவாவடுதுறைச் சிவஞான சுவாமிகள் முதலியோர் தமி ழில் மொழிபெயர்த்திருக்கின்றனர். அவை மிகக் கற்றவர் களுக்கே பயன்படற்பாலன.

அங்ஙனமின்றி அற்பங் கற்றவர்களுக்கும் பேராசிரிய ருதவியின்றிப் பயன்படுமாறு நாகப்பட்டணம் தாலூகா மஞ் சக்கொல்லை ராம. ச. இராமசாமி முதலியார் அவர்களின் குமா ரர் ராம. ச. சம்பந்த மூர்த்தி முதலியார் வேண்டுகோளின்படி

கோவிலூர் மடம், சிதம்பரம் பொன்னம்பல ஞானதேசிகர் மடாலயம், சிதம்பர ஞானதேசிக ரவர்களின் மாணாக்கர் சி. சுப்பைய சுவாமிகளால் எளிய தமிழ் நடையில் மொழி பெயர்க்கப்பட்டன. ( ) இங்ஙனக் குறிக்குள் விளக்க வுரை யும், நக்ஷத்திர முதலிய குறிப்பிடப்பட்ட கீழ் விளக்க வுரை யும் வரையப்பட்டுள்ளன.



## மொழிபெயர்ப்பாளர் தற்சிறப்புப் பாயிரம்.

*சிதம்பரநகர் பொனம்பலக் குருவின் சீரடி முடியினிற் கொணட, சிதமபர ஞான தேசிகன் றனைச் சிந்தையி னினைந் தனு தினமும், இதந்தரு மேலாந் தருக்க சங்கிரக மேற்றதீ பிகையெனு முரையைப், பதம்பெறத் தமிழி லாற்றினே னெவரும பார்த்திதை யெளிதி லேயுணர.*



உ

கணபதி துணை.

# தருக்க சங்கிரக மூலமும்

## தருக்க சங்கிரக தீபிகை என்னும் உரையும்

---

ஆசிரியர் தற்சிறப்புப் பாயிரம்

மூலம்.

**निधाय हृदि विश्वेशं विधाय गुरुवन्दनम् ।**
**बालानां सुखबोधाय क्रियते तर्कसंग्रहः ॥**

அன்புறு விசுவ நாத வமலனை யகத்தில் வைத்தே
யின்புறு வாக்கு மாசா னிணையடி மலரி றைஞ்சி
யென்பொரு ளிளையோ ரெல்லா மெளிதினி லுணர வேண்டி
முன்புறு தருக்க நூலின் சுருக்கமே மொழிகு வேனால்.

தீபிகை.

**विश्वेश्वरं साम्बमूर्तिं प्रणिपत्य गिरां गुरुम् ।**
**टीकां शिशुहितां कुर्वे तर्कसंग्रहदीपिकाम् ॥**

அம்பிகா சகித னன்னை பாரதி யாசான் றனை
நம்பியே வணங்கி நல்ல பாலர்த நன்மைக் காக
விம்பரிற் றருக்க சார தீபிகை யதனை யீண்டுச்
செம்பொரு ளுணர்ந்தோ ருள்ளங் கிளைப்புறச் செய்கு வேனால்.

நூல்.

இயற்ற விரும்பிய நூல் இடையூறின்றி முடியும் பொருட்டுச் சிட்டாசார (ஆன்றோரொழுக்கம்) த்தாலனுமிக்கப்பட்ட சுருதியால் போதிக்கப்பட்ட செய்யத்தக்கதான இஷ்ட தேவதை நமஸ்கார விலக்க

ணமான மங்கலத்தைச் சிடர்களுக்குக் கற்பிக்கும் பொருட்டுச் செய்யுள் வடிவமாய்ச் செய்பவராய் இயற்ற விரும்பியதை நூலாரம்பத்திலுணர்த்து கின்றார், 'அன்புரு' என' அற்றேல், மங்கலம் * முடிவிற்குக் காரணமன்று, மங்கலஞ் செய்த போதும் 'காதம்பரி' முதலியவற்றில் இடையூறின்றி முடிவு காணாமையால், மங்கலஞ் செய்யாத போதும் 'கிரணாவலி' முதலியவற்றில் முடிவு காணப்படுவதால், அந்நுவய (உடன்பாடு) த்தாலும் வியதிரேக (எதிர்மறை) த்தாலும் பிறழ்ச்சியாம் எனின்; அற்றன்று, காதம்பரி முதலியவற்றில் இடையூற்றின் மிகுதியால் முடிவில்லை கிரணாவலி முதலியவற்றிலெனிலோ நூற்கு வெளியே மங்கலஞ் செய்யப்பட்டது. ஆகையால் பிறழ்ச்சியில்லை என்க அற்றேல், மங்கலஞ் செய்யத்தக்கதென்பதற்கு யாது பிரமாணமெனின்; அற்றன்று, சிட்டாசாரத்தாலனுமிக்கப்பட்ட சுருதியே பிரமாணமாதலால், அது 'நூன்முடிவை விரும்புவோன் காப்பியற்றுக' என்னுஞ் சுருதியாம். அது (அநுமானம்) எங்ஙனமெனின் மங்கலம் வேதத்தாற் கூறப்பட்ட கர்த்தவ்யம் (செய்யத்தக்கதாந் தன்மை) உடையது,

---

* ஒரு அதிகரண (இடம்) த்திலிருக்கும் இரண்டு பதார்த்தங்களே ஒன்றற்கொன்று காரியகாரணங்களாம். சகலவெழுத்துக்களினழிவு நூன் முடிவு. எழுத்து சத்தவடிவம், சத்தம் ஆகாசகுணம், ஆகாசத்தில் சத்தம் சமவாயசம்பந்தமாக விருக்கின்றது, சத்தத்தினழிவும் ஆகாசத்தில் சொரூப சம்பந்தமாயிருக்கின்றது, ஆகவே எழுத்துக்களினழிவுக்கதிகரணம் ஆகாசமாயிற்று

மங்கலம் தேவதாஸ்மரண (நினைவு) வடிவம், அந்த ஸ்மரணம் ஆன்மாவிலுள்ளது. இங்ஙனம் மங்கலம் நூன்முடிவு என்னும் இரண்டிற்கும் வெவ்வேறு அதிகரணமாகையால் சமானாதிகரணம் (ஒரு நிலைக்களம்)

சமானாதிகரணஞ் சித்திக்கும்பொருட்டு இச்சம்பந்தமாம் :— தனது (எழுத்துக்களினழிவு) பிரதியோகியாகிய கடைசி எழுத்திற்கு அனுகூலமான முயற்சியுடைய சம்பந்த மிருக்கின்றது, இச்சம்பந்தத்தால் நூன் முடிவு நூற்கருத்தாவான புருடனுடைய ஆன்மாவிலிருக்கின்றது. இதனால் மங்கலமும் நூன் முடிவும் சமானாதிகரண முடையனவாம். அதனால்; நூல் மங்கலத்தால் முடிகின்றது.

உலக நடையும் பழிப்புமல்லாத சிட்டாசாரத்திற்கு விடயம் (ஆன்றோராலனுட்டிக்கப்படுவது) ஆதலால், தரிச (வேள்வி) முதலியனபோல, உணவு முதலியவற்றிற் (செல்லும்) பிறழ்ச்சியை நீக்க உலகநடையல்லாத என்றும், இராவிற் (செய்யும்) சிராத்த முதலியவற்றிற் பிறழ்ச்சியை நீக்கப் பழிப்பல்லாத என்றுமாம்; (உலகநடையும் பழிப்புமல்லாத ஆசார விடயமாதலாலெனவே அமைதலின்) சிட்டர் என்னும் பதம் வெளிப்படைக் (சிட்டர் - வேத பிராமணிகர் என்பதற்) காக 'பயனிலாக்கருமஞ் செய்யற்க' என ஜலதாடனம் முதலியன விலக்கப்படுதலால் (அவை) பழிப்புடைமையில் அமையுமென்க.

தருக்கிக்கப்படுகின்றன சொல்லப்படுகின்றன என்பன தருக்கங்கள். அவை திரவிய முதலிய ஏழு பதார்த்தங்கள் அவைகளைச் சொல்லும் நூலின் சங்கிரகம். (அதாவது) சுருக்கிப் பதார்த்தங்களின் சொரூபத்தைச் சொல்லுதல் (தருக்க சங்கிரகம்) என்பது பொருள். எப்பயனின் பொருட்டெனின், எளிதினில் - ஆயாசமில்லாமல். உணர வேண்டி பதார்த்தங்களை அறியவேண்டி எனக் கூறுகின்றார். அற்றேல், தருக்க நூல்கள் அநேகமிருத்தலின் எதன்பொருட்டு இப புதிய நூல் செய்யப்படுகின்றதெனின், இளையோருக்கெனக் கூறுகின்றார். அவை விரிவுடைமையால் இளையோருக்கு அவற்றால் அநாயாசமாக ஞானமுண்டாகாது என்னும்பொருட்டு என்பது பொருள். கோடல் அமைத்தல் இவற்றில் வல்லுநர் இளையோர், பாலருந்தும் பருவத்தினரன்றென்பதாம். என்செய்து இயற்றப்படுகின்றதெனின் அகத்தில் வைத்து என்றார் (நீர்க்குடம் தயக்கெனக் கொண்டுவரப்படினும் வழிபோக்கருக்கு நற்சகுனத்தின்பொருட்டாமாகின்றதுபோல ஈண்டு விசுவநாதன் - உலகங்களை நியமிக்கும் சிவன் என்பது மங்கலத்தின் பொருட்டாயினும் இந்நூலாசிரியர் தமது உபாசனாமூர்த்தியாகிய ஸ்ரீ காசியம்பதியி லெழுந்தருளி யிருக்கின்ற விசுவநாதனையும் நினைவு கூர்கின்றார்) அகத்தில் வைத்து - அவனை இருதயத்தில் நன்றாகப் பதியவைத்து அதாவது எப்போதும் அவன் தியானத்தையே மேற்கொண்டவனாயிருந்துகொண்டு என்பது பொருள் மீண்டும் என்செய்து எனின் ஆசானிணையடி மலரிறைஞ்சி என்றார். 'இன்புரு வாக்கு மாசான்' என்பதற்கு வித்தையின்ப மளிக்கும் வித்யா குருவின் திருவடி மலரை வணங்கி என்பது பொருள்.

## பதார்த்தம்.

மூலம்—திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவம் எனப் பதார்த்தங்கள் ஏழு. (இவற்றிற்கு முறையே பொருள், பண்பு, தொழில், பொதுமை, சிறப்பு, ஒற்றுமைச் சம்பந்தம், இன்மை என்பன பொருள்களாம்.)

தீபிகை—திரவியம் என்பது பதார்த்தங்களைப் * பகுக்கின்றது. பதார்த்தம் - பதத்திற்கு அர்த்தம் என்ற வியுத்பத்தி (விரிதல்) யினால் அபிதேயத் தன்மை (பெயரிட்டு வழங்கப்படுந் தன்மை) பதார்த்த சாமானிய (பொது) இலக்கணம். அற்றேல், ஈண்டுப் பகுத்தலானேயே ஏழென்பது பெறப்படும்போது ஏழென்றது எதன் பொருட்டெனின்; அற்றன்று, (பதார்த்தங்களின்) அதிக எண்ணிக்கையை விலக்குதற் பொருட்டாகலின்; அற்றேல், மேற்பட்ட பதார்த்தம் பிரமாணத்தால் அறியப்பட்டதா இல்லையா அறியப்பட்டதெனின் பிரமாணத்தால் அறியப்பட்டதை விலக்குதல் கூடாது, அறியப்படவில்லை எனின் § பிரதியோகியின் உண்மைஞானமில்லாமல் விலக்குதல் கூடாதாதலால் என்றால், அங்ஙனமன்று :—பதார்த்தத்தன்மை திரவிய முதலிய ஏழில் ஒன்றன்கண் வியாப்பியமாம் (அடங்கும்) என்னும் நிச்சயத்தின் பொருட்டாகலின்; அற்றேல், ஏழில் ஒன்று என்பது ஏழின் வேறானதின் வேறு என்பதாம் (அதாவது திரவிய முதலிய எந்த ஏழு பதார்த்தங்களுண்டோ அவற்றின் பேதக்கூட்டமுடைய வேறொன்றின் வேறானது என்பது பொருள்) இவ்வாறாகவே ஏழின் வேறானது பிரசித்தமாக இராமையின் ஏழின வேறானதின் வேறு என்பது எங்ஙனம் எனின்; அற்றன்று, திரவிய முதலிய ஏழில் ஒன்றன்கண் வியாப்பிய

---

* பகுத்தலாவது தன் (பகுத்தல்) னுடன் சேர்ந்திருக்கும் பதார்த்தத் தன்மையை வரைந்துகொள்வதின் வியாபியமாய் ஒன்றற்கொன்று விரோதமாயிருக்கின்ற சர்வதர்மங்களையும் விசேடணமாகவுடைய ஞானத்திற்கு அநுகூலமான வியாபாரம். மேலுமிவ்வாறே காண்க.

§ தத்த மபாவத்திற்குத் தாந் தாம் பிரதியோகியாகிய தத்த முணர்ச்சி பெற்றாலன்றித் தத்த மபாவ வுணர்ச்சி பெறப்படாதென்பது தருக்கநூற் றுணிபு.

மென்பதாவது திரவிய முதலிய ஏழுபேதங்களின் அபாவமுடைமை யாம். (அதாவது திரவிய முதலியவற்றின் தனித்தனி பிரசித்தமான ஏழுபேதங்களும் யாண்டும் இல்லாமையாகிய ஏதுவால் அத்தகைய ஏழு பேதத்தன்மையால் அவச்சின்னமான அபாவமானது யாண்டும் (திரவியாதி ஏழினும்) இருபபதனுல் தோஷமில்லை என்பது கருத்து)

அவற்றுள்—திரவியம பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆன்மா, மனம் என ஒனபதே.

அவற்றுள் என்பது திரவியமுதலியவற்றினுள் என்றபடி. பிருதிவி எ-து திரவியத்தைப் பகுக்கின்றது திரவியம் ஒன்பதே யெனக்கூட்டுக.

அற்றேல், இருள் பத்தாந் திரவியமாகையால் திரவியங்கள் ஒன் பதே (என்பது) எங்ஙனம, அஃதாமாறு:—இருள் 'கருமையானது இயங்குகின்றது' என்று விலககப்படாத விளக்கத்தின் பலத்தால் கருமை ரூபததிற்கும் சலிக்குந் தொழிலுக்கும ஆதாரமாகையால் திர வியத் தன்மை சித்தித்தது ஆண்டு உருவமுடைமையால் ஆகாச முதலிய ஐநதனுள்ளும், இத (உருவமுடைமை) னுனும் பரிசமின்மை யானும் சதா சலித்தலின்மையானும வாயுவினும், ஒளிவடிவ மின் மையானும் உஷ்ண பரிசமின்மையானும் தேயுவினும், குளிர்ந்த பரிச மின்மையானும் கருமை ரூபத்திற்கிடமாகலானும் அப்புவினும், கந்த மினமையானும் பரிச மின்மையானும் பிருதிவியினும் அடங்குவ தில்லை. ஆகையால் இருள் பத்தாந்திரவியமெனின்; அற்றன்று, இருள் ஒளியின் அபாவ ரூபமாதலின் அஃதெங்ஙனமெனின் :—இருள் உருவ முடைய திரவியமன்று, ஒளியால் உதவிசெய்யப்படாத விழியால் உணரப்படுதலின், ஆலோக (தீப) த்தின் அபாவம் போலும், உருவ முடைய. திரவியத்தின் கண்ணுலுண்டாகும் உண்மையுணர்ச்சியில் ஒளிகாரணமாதலினுல், அதிகப் பிரகாசமுடைய தேயு சாமானியத்தின் அபாவம் இருளாம். இருள் கருவுருவமுடையது சலிக்கின்றது என்னு மிடத்து ஞானம் பிராந்தி (அத்தியாசம்) யாம். ஆகையால் திரவியங்கள் ஒன்பது எனப் பெறப்பட்டது.

திரவியத் தன்மை ஜாதியுடைமை, அல்லது குணமுடைமை திரவியத்தின் சாமானிய இலககணம். இலக்கியத்தின் ஏடத்தில் (இலக்கணம்) இல்லாதிருத்தல் அவ்வியாப்தி; அது பசுவிற்குக் கபில நிறத்தன்மை. இலக்கியமல்லாததிலிருத்தல் அதிவியாபதி ; அது

பசுவிற்குக் கொம்புடைமை. இலக்கியமுழுவதினு மில்லாமை அசம்பவம்; அது பசுவிற்கு ஒற்றைக்குளம்புடைமை. இம் மூன்று தோடங்களுமில்லாத தருமம் இலக்கணம். அது பசுவிற்கு அலைதாடிகோடுடைமை. அதுவே அசாதாரண தருமம் (சிறப்பியல்பு) என்று சொல்லப்படும். * இலக்கியத் தன்மையை வரைந்து கொள்வதனோடு சம நியதமாய் (வியாபய வியாபக பாவமாய்) இருத்தல் அசாதாரண (சிறப்பு)த் தன்மை (வியாவிருத்தி வியவகாரம் என்று இலக்கணத்திற்கு இரண்டு பயன் அவற்றுள் முதற்பயனைக் கொண்டு கூறுகின்றார்) வியாவர்த்தகமே (வேறு படுப்பதே அதாவது பிறவற்றினின்றும் வேறுபடுதலைப பயனாகவுடையதே) இலக்கணமாம் எனின் (அப்போது) வியாவிருத்தியினும் (வேறுபடுதலினும் அதாவது பசு முதலியவற்றினின்றும் பிறவற்றின பேதத்தினும்) அபிதேயத் தன்மை முதலியவற்றினும் அதிவியாப்தியை நீக்க அவற்றின் வேறாதலை அசாதாரண தருமத்திற்கு விசேடணமாகக் கூறவேண்டும். (ஏனெனின் வியாவிருத்தியாகிய பிறவற்றின பேதமும் அபிதேயமும் இலக்கியத் தன்மையை வரைந்து கொள்வதனோடு சம நியதமாயிருப்பதனாலும் வேறு படுதலான பிறவற்றின் பேதமாகிய பயனில்லாததாயிருப்பதனாலுமாம்) வியவகாரமும இலக்கணத்தின் பயன் எனக்கொள்ளும் போது அவ்விசேடணங் கூறவேண்டாம். வியாவிருத்தியும் வியவகார சாதனமாதலால். வியவகாரம் - வழங்குதல். அற்றேல், குணமுடைமை திரவிய சாமானியத்தின் இலக்கணமன்று முதற் கணத்திறரேனறி அழிவுபடூஉ திரவியத்தில அவவியாபதியாமெனின்; அற்றன்று, குணத்தோடு சமானாதிகரணமுடைய (ஒரு நிலைக்களத்திருப்பது) தாய்ச் சத்தாசாதி (உண்மைத் தன்மை) யினும் வேறாயுள்ள சாதிபுடையதென்று கூற விரும்பினமையால். (குணாதிகரண யோககியமுடையது என்பது பொருள்.)

அற்றேல், உருவம் ஒன்று இரசத்தின் வேறு என்னும் வியவகாரமிருத்தலின் உருவமுதலானவற்றில் அதிவியாபதி எனின்; அற்றன்று

*சாதாரண தகினும் வேறுபட்டது அசாதாரணம் என்று பொருள் கொள்ளும்போது அவ்வியாப்தியும் அசாதாரணமாகின்றது என்று அதனைப பரிகரிக்கின்றார் இலக்கியத் தன்மையை வரைந்து கொள்வதனோடு சமநியதமாய் என,

ஒரு பொருளைச் சமவேதி (ஒற்றித்து)த் திருப்பதனாலேயே அவ்வாறான வியவகாரம பொருந்துங்கால குணததில் குணம் (இருபபதாக) அங்கீ கரியாமையின்.

குணம் உருவம், இரசம, கந்தம், பரிசம், சங்கியை, பரிமாணம, வேற்றுமை, சையோகம, விபாகம, பரத்துவம, அபரத்துவம, குருததுவம, திரவத்துவம, சிநேகம, சத்தம, புத்தி, சுகம, துககம, இசசை, துவேஷம், பிரயததனம, தருமம், அதருமம, சமஸகாரம என இருபத்துநானகு விதம.

உருவம் எ - து குணங்களைப பகுக்கின்றது. திரவிய கருமங்களுக்கு வேறாய்ச் சாமானிய (சாதி) முடையது குணம். அல்லது குணத் தன்மை சாதியுடையதெனினுமாம். இலகுத்தன்மை, மிருதுத தன்மை, கடினததன்மை முதலியனவுமிருததலால், குணங்கள் இருபத்துநான்கு எனல எஙஙனம் எனின ; அறறன்று, இலகுத் தனமை குருததன்மையின அபாவ வடிவமாதலாலும், மிருதுத் தன்மை கடினத் தன்மைகள் அவயவச் சேர்க்கையின் விசேட வடிவமாதலாலும் என்க.

கருமம் எழுதல, வீழுதல், குவிதல், விரிதல், நடத்தல் என ஐநது விதம்.

எழுதல் எ - து கருமங்களைப் பகுக்கின்றது. சையோகத்திற்கு வேறாய்ச சையோகத்திற்கு அசமவாயி காரணம கருமம். அல்லது கருமத்தன்மைச் சாதியுடையது எனினுமாம். அற்றேல், சுழலுதல முதலிய வேறு கருமமுமிருத்தலின் ஐந்தென்றது பொருத்தமின்றெனின் ; அற்றன்று, சுழலுதல் முதலியனவும் நடத்தலில் அடங்குமாகையால் ஐந்தென்றது விரோதமின்று.

சாமானியம் பரம், அபரம் என இரண்டு விதம்.

பரம் எ - து சாமானியத்தைப் பகுக்கின்றது. பரம் அதிக தேசத்திலிருப்பது. அபரம் குறைந்த தேசத்திலிருப்பது. சாமானிய முதலிய நான்கினும் சாதியில்லை.

விசேடம் நித்தியத்திரவியத்திலுள்ளன, அவை எணணிறந்தனவே யாம.

நித்திய எ - து விசேடத்தைப் பகுக்கின்றது. பிருதிவி முதலிய

ன் பரமாணுக்களும் ஆகாச முதலிய வைந்தும் நித்தியத் திரவியங்கள்.

சமவாயமோ ஒன்றே.

சமவாயம் எ - து சமவாயத்திற்குப் பேதமில்லை என்கின்றது.

அபாவம் பிராக்பாவம், பிரத்துவம்சாபாவம், அத்தியந்தாபாவம், அந்நியோந்நியாபாவம் என நான்குவிதம்.

பிராகபாவம் எ - து அபாவத்தைப் பகுக்கின்றது.

## 1 திரவியம்.

அவற்றுள், பிருதிவி கந்தமுடையது. அது இரண்டு விதம்; நித்தியம், அநித்தியம் என்று. நித்தியம் பரமாணு ரூபம். அநித்தியம் காரிய ரூபம். மீண்டும் மூன்று விதம்; சரீரம், இந்திரியம், விடயம் எனவும் பேதத்தால். சரீரம் நம்மனோருக்குள்ளது. இந்திரியம் கந்தத்தைக் கவர ஏதுவாயுள்ளது, கிராணேந்திரியம், அது நாசி நுனியிலிருப்பது. விடயம் மண் கல முதலியன.

கந்தமுடையது எ - து உத்தேச முறைப்படி முதலில் பிருதிவியினிலக்கணங் கூறுகின்றது. பெயரால் பதார்த்தத்தைச் சொல்லுதல் உத்தேசம். உத்தேச முறையில் யாண்டும் (கூறுவோன்) இச்சையே நியமனஞ் செய்வது. அற்றேல், நற்கந்த துர்க்கந்த அவயவங்களால் உண்டான திரவியத்தின்கண்ணே ஒன்றற்கொன்று விரோதத்தினால் கந்தமுண்டாகாமையின் அவ்வியாப்தியாம். ஆண்டுக் கந்தத் தோற்றம் பொருந்தாதெனச் சங்கிக்கலாகாது (அதாவது கந்தந் தோன்றுகின்றபடியால் அவயவியின்கண்ணே சித்திர (கலப்பு) கந்தத்தை ஒப்பவேண்டுமென்பது சங்கையின் கருத்து) அவயவத்தின் கந்தமே அவயவியின் கண்ணே தோற்றுவதால் சித்திர கந்தத்தின் அங்கீகாரமின்றாமாதலின், மேலும் தோன்றி அழியுங் கடாதிகளின்கண்ணேயும் அவ்வியாப்தியாம் எனின்; அற்றன்று, கந்தத்தின் அதிகரணத்திலிருப்பதும் திரவியத் தன்மையின் அபரமும் ஆன சாதியுடைமையைச் சொல்ல விரும்பினமையால். அற்றேல், நீர் முதலியவற்றில் கந்தங் காணப்படுவதால் அதிவியாப்தி எனின்; அற்றன்று, அந்நுவய வியதி

ரேகங்களால் பிருதிவியின் கந்த விளக்கமே ஆண்டு ஒப்புகின்றபடியால். அற்றேல், அங்ஙனமாயினும காலம் எல்லாவற்றிற்கும் பற்றுக்கோடு (ஆதாரம்) ஆகையால் எல்லா இலக்கணங்களுககும் ஆண்டு அதிவி யாப்தி எனின்; அற்றன்று, எல்லாவற்றிற்கும ஆதாரத்தை யுண்டாக் கும் (காலிக) சமபந்தத்தினும் வேறான சமபநதததால இலக்கணத்திற்கு ஒப்பியிருபபதால். அது இரண்டு விதம் எ - து பிருதிவியைப் பகுக் கின்றது. நித்தியமாவது துவம்ச (அழிவு) த்திற்குப் பிரதியோகியாகா தது. துவம்சத்திற்குப் பிரதியோகியாவது அநித்தியம்.

மீண்டும் எ - து வேறுவகையாகப் பிரிக்கின்றது. ஆன்மாவின் போகத்திற்கிடமாயுள்ளது சரீரம். எதன் அவச்சின்னமான (வரைவு) ஆன்மாவின்கண் போகமுண்டாகின்றதோ அது போகாயதனம் (இடம்). சுகதுக்கங்களிரண்டில் ஒன்று சாக்ஷாத்காரம் (புலன்) ஆவது போகம். * சத்தத்தின் வேறாகிய உத்பூத விசேட குணங்கட்கு ஆசிரய மாகாமல் ஞான காரணமான மனதின் சம்பந்தத்திற்கு ஆசிரயமாய் இருக்குந் தன்மை இந்திரியத் தன்மை சரீர இந்திரியங்களுக்கு வேறா னது விடயம். இவ்வாறாகவே கந்தமுடைய சரீரம் பார்த்திவ (பிருதிவி)

* செவியில் அவ்வியாபதியை நீக்க சத்தத்தின் வேறாகிய என் றும், துவக்கு, சக்ஷுசு, இரசனம், கிராணம் இவற்றில் அவ்வியாப்தியை நீக்க உத்பூத என்றும், எல்லா இந்திரியங்களிலும் அசம்பவத்தை நீக்க விசேடம் என்றும், மனதோடு காலத்திற்குண்டாம் சையோக நாசத் தைக் குறித்துக் காரணமாகையால்; காலத்திலுண்டாம் அதி வியாப்தியை நீக்க ஞானம் என்றும், பிராசீனர் மதப்படி சக்ஷுசு, இந்திரிய ஆரம்ப அவயவத்திலும், நவீனர் மதப்படி காலததில் ரூபா பாவ ஞானத்தைக் குறித்துக் காலத்திலும் உண்டாகும், அதிவியாப்தியை நீக்க மனம் என்றும் கூறப்பட்டது.

இந்திரியத்தன்மை சாதியன்று, மற்றோ சகண்டோபாதியாம் சகண்டோபாதி அகண்டோபாதி என உபாதி இரண்டுவிதம்:— இலக் கணத்தால் நிச்சயிக்கப்படுந் தருமம் சகண்டோபாதியாம் அது இந்திரி யத்தன்மை தருமம்போல. நிச்சயிக்கப்படாதது அகண்டோபாதியாம் அது ஒரு ஆன்மாவிற்கு மற்றோர் மனதோடு சையோகமாகாமைக்குக் காரணமாம் தருமம்போல.

சரீரம், கந்தமுடைய இந்திரியம் பார்த்திவ இந்திரியம், கந்தமுடைய விடயம் பார்த்திவ விடயம் என்று அதனதன் இலக்கணங் கூறப்பட்டது. சரீரம் எ-து பார்த்திவ சரீரத்தைக் காட்டுகின்றது. இந்திரியம் எ-து இந்திரியத்தைக் காட்டுகின்றது. கந்தத்தைக் கவர்வது எ-து பயனைச் சொல்வது. கிராணம் என்றது பெயர் நாசி நுனியில் எ-து இருப்பிடங் கூறுகின்றது. இவ்வாறே மேலும் அறியத்தக்கது. மண் கல் எ-து பார்த்திவ விடயங் காட்டுகின்றது.

அப்பு சீத பரிசமுடையது. அது இரண்டுவிதம்; நித்தியம், அநித்தியம் என்று. நித்தியம் பரமாணுரூபம். அநித்தியம் காரியரூபம். மீண்டும் மூன்று விதம்; சரீரம், இந்திரியம், விடயம் என்னும் பேதத்தால். சரீரம் வருண லோகத்திலுளளது; இந்திரியம் இரசத்தைக் கவர ஏதுவானது இரசனேந்திரியம், அது நாவின் நுனியிலிருப்பது, விடயம் ஆறு, சமுத்திரம முதலியன.

சீத எ-து அப்புவினிலக்கணங் கூறுகின்றது. முதற் கணத்திற் றோன்றி அழிவுபடும் அப்புவில் அவ்வியாப்தியை நீக்க, சீத பரிசத்தின் சமானாதிகரண முடையதாய்த் திரவியத்தன்மைச் சாதியினும் அபர (குறைவு)மான சாதியுடைமை என்பது அபிப்பிராயம். 'சீதம் கற்றலம்' என்பது முதலியவற்றில் அப்புவின் சம்பந்தத்தினாலேயே சீத பரிச விளக்கமாகையால் ஆண்டு அதிவியாப்தியில்லை. ஏனையனைத்தும்முன் முறைப்படி விரித்து உரைத்துகொள்க.

தேயு உஷ்ண பரிசமுடையது. அது இரண்டுவிதம்; நித்தியம், அநித்தியம் என்று. நித்தியம் பரமாணுரூபம், அநித்தியம் காரியரூபம். மீணடும் மூன்றுவிதம்; சரீரம், இந்திரியம், விடயம் என்னும பேதத்தால். சரீரம் ஆதித்திய லோகத்திலுள்ளது, இந்திரியம் உருவத்தைக் கவர ஏதுவாயுள்ளது, சக்ஷு, அது கருவிழியின் நுனியிலிருப்பது. விடயம் நான்குவிதம்; பௌமம (பூமியிலுள்ளது) திவ்வியம் (ஆகாசத்திலுள்ளது) உதரியம் (வயிற்றிலுள்ளது) ஆகாசம் (சுரங்கத்திலுள்ளது) என்னும் பேதத்தினால். பௌமம் தேயு

முதலியன. திவ்வியம் அப்புவை இந்தன (விறகு) மாகவுடைய மின்னல் முதலியன. உதரியம் உண்ட வுணவின் பரிணமகார ணம். ஆகரசம் சுவர்ண முதலியன.

உஷ்ண பரிசமுடையது எ-று தேயுவினிலக்கணங் கூறுகின்றது. 'சுடுகின்றது அப்பு' என்ற தோற்றம் தேயுவின் சம்பந்தத்தாலாவதால் அதிவியாபதியில்லை. பௌமம் எ-று விடயத்தைப் பகுக்கின்றது. அற்றேல், சுவர்ணம் பார்த்திவம் (பிருதிவியின் கூறு) மஞ்சள் உருவு டையதாயும் கனமுடையதாயு மிருத்தலால், மஞ்சள்போல எனின்; அற் றன்று, ஓங்கி எரிகின்ற அனல் சம்பந்தமுள்ளபோது நெய் முதலியவற் றின் நெகிழ்ச்சிக்கு நாசங் காண்டலானும், அப்புவினிடையிலுள்ள நெய்யின் நெகிழ்ச்சியின் நாசங் காணாமையானும், பிரதிபந்தகம் (தடை செய்வது) இல்லாதபோது பார்த்திவ நெகிழ்ச்சி நாசத்திற்கும் தேயுவின் சையோகத்திற்கும் காரிய காரணத்தன்மை நிச்சயமாம். சுவர்ணம் ஓங்கி எரிகின்ற அனல் சம்பந்தமுள்ளபோது நாசப்படாத நெகிழ்ச்சிக்கிட மாகையால் (நெய்போல) பார்த்திவத்தன்மை பொருத்தமில்லாமையால் என்க. ஆகையால் மஞ்சள் திரவியத்தின் நெகிழ்ச்சியின் நாசத்தின் பிரதிபந்தகமாக நெகிழ்ச்சியுடைய வேறு திரவியம் வேண்டும். வேண் டவே அது நைமித்திக (நிமித்தத்தாலான) நெகிழ்ச்சிக்கிடமாவதால் அப்பு வென்பதும், உருவமுடைமையால் வாயு முதலியன என்பதும் பொருந்தாதபடியால் தேயுவெனல் பெறப்பட்டது. அதன்கு உஷ்ண பரிசமும் விளக்கரூபமும் அதனைச் செறிந்த பார்த்திவரூப பரிசங்களால் தடுக்கப்படுகின்றமையின் விளங்கவில்லை. ஆகையால் சுவர்ணம் தேயு வெனப் பெறப்பட்டது.

வாயு உருவமின்றிப் பரிசமுடையது. அது இரண்டு விதம்; நித்தியம், அநித்தியம் என. நித்தியம் பரமாணு ரூபம். அநித்தியம் காரியரூபம். மீண்டும் மூன்றுவிதம்; சரீரம், இந்திரியம், விடயம் என்னும் பேதத்தினால். சரீரம் வாயுலோகத்திலுள்ளது. இந்திரியம் பரிசத்தைக் கவர்வது, துவக்கு, அது சரீர முழுவதிலுமுள்ளது. விடயம் மரம் முதலியன அசைதற்குக் காரணம். சரீரத்துள் சஞ்சரிக்

கும்வாயு பிராணன். அதுவும் ஒன்றாயினும் உபாதி வேறு பாட்டால் பிராணன் அபானன முதலிய பெயரை யடைகின்

உருவமின்றி எ-து வாயுவை நிரூபிக்கின்றது. ஆகாச முதலிய வற்றில் அதிவியாப்தியை நீக்கப் பரிசமுடையதென்றும், பிருதிவி முத லியவற்றில் அதிவியாப்தியை நீக்க உருவமின்றியென்றும் கூறபபட் டது பிராணனுக்கு யாண்டு அடக்கமென்னும் வினவிற்குச் சரீரத்தி னுள்ளே யென்று (விடை) கூறுகின்றது. அதுவும் என்றது ஒரே பிராணன் இடவேறுபாட்டால் பிராணன் அபானன் முதலிய சத்தங்க ளால் வியவகரிக்கப்படுகின்றது என்று கூறியவாறு

பரிசத்தால் அனுமித்தறியத்தக்கது வாயு. அஃதெங்ஙனமெனின் 'வாயு வீசுமபோது உஷ்ணமும் சீதமும் இல்லாத யாதொரு பரிசம் விளங்குகின்றதோ அப்பரிசம் ஒரு பொருளைபபற்றிநிற்கும் (பரிசம் பக் கம்), குணத்தன்மையுடையதால, உருவமபோல' இதற்குப் பிருதிவியு மாசிரயமனறு, உத்பூத (புலப்பட்ட) பரிசமுடைய பிருதிவியின் அம்சத் திற்கு உத்பூத உருவமுடைமை நியமமாதலால். அப்பு தேயுககளு மன்று, சீதமும் உஷ்ணமு மில்லாமையால் வியாபகப்பொருள் நான் குமன்று, எஙகும் விளங்கவேண்டுமென்னும் வியவகாரத்தால். மனமு மன்று, பரமாணுவின் பரிசம் அதீந்திரியம் (இந்திரிய விடயமாகாதது) ஆகையால. இதனால் தோன்றுகின்ற பரிசத்திற்கு ஆசிரயம் யாது அது வாயு அற்றேல், 'வாயு பிரத்தியக்ஷம், பிரத்தியக்ஷ பரிசத்திற்கு ஆசிரயமாகையால், கடம்போல' எனின்; அற்றன்று, உத்பூத உருவமு டைமை உபாதியாகலின். 'யாண்டு திரவியமாய் வெளியிந்திரிய பிரத் தியக்ஷமாயிருக்கின்றதோ ஆண்டு உத்பூத உருவம், (உண்டு) என்று கடாதிகளில் சாத்திய வியாபகமும் பக்ஷத்தில் (உள்ள) சாதன அவ்வியா பகமும் அறிக. அற்றேல், (பிரத்தியக்ஷ பரிசத்திற்கு ஆசிரயமான வாயு வும் உத்பூத ரூபமின்மையினால் பிரத்தியக்ஷமன்றெனின்) வெந்நீரின் கண்ணுள்ள தேயுவும் பிரத்தியக்ஷமின்றாதல் வேண்டும் என்று கூறற்க; ஏனெனின் அதுவே யெமது விருப்பமாகலின். ஆகையால் உருவமின் மையின் வாயு பிரத்தியக்ஷமன்று.

இப்போது காரியவடிவப் பிருதிவி முதலிய நான்கின் உத்பத்தி நாசமுறை சொல்லப்படுகின்றது:—ஈசுவரனுடைய சிருட்டிக்கவேண்டு

மென்ற இச்சை வயத்தால் பரமாணுக்களிற் கிரியை யுண்டாகின்றது, அதனால் பரமாணு இரண்டற்குச் சேர்க்கை யுண்டாகும்போது துவியணுகமுண்டாகின்றது. மூன்று துவியணுகங்களினால் திரியணுகமாம் இவ்வாறு சதுரணுகமுதலிய முறையாக மகத் (பெரிய) பிருதிவி, மகத் ஜலம், மகத்தேயு, மகத்வாயு உண்டாகின்றன. இவ்வாறுண்டான காரிய திரவியத்தை அழிக்கவேண்டுமென்ற இச்சைவயத்தால் பரமாணுக்களில் கிரியையுண்டாய்ப் பரமாணு விரண்டிற்குப் பிரிவுண்டாகும்போது துவியணுகமழியும். அதன்பின்னர் திரியணுகமும் அதன்பின்னர்ச் சதுரணுகமும் என்று இவ்வாறு பிருதிவி முதலியன அழியும். (பரமாணுவாகிய சமவாயிகாரணம் நித்தியமாகையால்) அசமவாயிகாரண (பரமாணு விரண்டின் சையோகம்) நாசத்தால் துவியணுக நாசம். சமவாயிகாரண நாசத்தால் திரியணுகநாசம் என்பது சம்பிரதாயம். யாண்டும் அசமவாயிகாரண நாசத்தால் திரவியநாசமென்பர் நவீனர். பரமாணுவினிருப்பில் யாது பிரமாணம் எனின், சொல்லப்படுகின்றது — பலகணியின் வழியாகக் காணப்படும் சூரியகிரணத்தில் யாதொன்று சூக்குமதம (மிகநுண்ணியது) மாய்க் காணப்படுகின்றதோ அது சாவயவம் (அவயவமாகிய காரணத்தோடு கூடியது) விழிக்கு விடயமாவதால், படம்போல (இதனால் திரியணுகம் பெறப்பட்டது). திரியணுகத்தின் அவயவமும் சாவயவம், மகத் (பெரிது) தை ஆரம்பிப்பதாதலின், நூல்போல (இதனால் துவியணுகம் பெறப்பட்டது) துவியணுக அவயவம் யாதோ அதுவே பரமாணு அது நித்தியம். அதுவும் காரியமெனின் அநவஸ்தை (வரம்பின்மை) யின் அடைவாம் அடைவாகவே, மேரு கடுகுகளுக்குச் சமான பரிமாணத்தின் பிராப்தியாம்

சிருட்டி பிரளயங்களில் யாது பிரமாணமெனின்; அற்றன்று, 'பிரமதேவர் முன்போல் (உலகை) ஆக்கினார்' என்னு சுருதிப்பிரமாணமிருத்தலால். சர்வ காரிய திரவியங்களினழிவு அவாந்தரப் பிரளயம், காரியமான சர்வ பாவ பதார்த்தங் (குணம் கிரியை முதலியன) களின் அழிவு மகாப்பிரளயம் என்பது வேறுபாடாம்

*ஆகாசம் சத்தகுணமுடையது. அதுவும் ஒன்றாய், விபுவாய், நித்தியமுமா யிருப்பது.*

சத்தகுணமுடையது என்று ஆகாசத்தினிலக்கணங் கூறுகின்றது. அதுவும் ஒன்றாய் என்று ஆகாசம் பிருதிவி முதலியனபோல பலவா

யென்றுசங்கித்து அன்றென்கின்றது: பேதத்தில் பிரமாணமின்மை யால் என்பது பொருள விபுவாய எ-து ஒன்றாகியே யாண்டும் விளங்குகின்றமையின விபுவென அங்கீகரிக்கவேண்டுமென்கின்றது சகல மூர்த்தத் திரவியங்களோடும் சையோகமுடையதாயிருத்தல் விபு வாம். மூர்த்தம் பரிச்சின்ன பரிமாணமுடையது அல்லது கிரியை யுடையது நித்தியமும எ-து வியாபகத்தன்மையானே ஆன்மாவைப் போல நித்தியமானதெனறு கூறுகின்றது

காலம் சென்றது முதலிய வியவகாரத்திற்குக் காரணமா வது. அதுவும் ஒன்றாய, விபுவாய், நித்தியமுமாயிருப்பது.

சென்றது எ-து காலத்தினிலக்கணங் கூறுகின்றது காலம் எல் லாவற்றிற்கும் ஆதாரமும் சகல காரியங்களுக்கும் நிமித்தகாரணமுமாம்.

திக்கு கிழக்கு முதலிய வியவகாரத்திற்குக் காரணமா வது. அதுவும் ஒன்றாய, விபுவாய், நித்தியமுமாயிருப்பது.

கிழக்கு எ-து திக்கினிலக்கணங் கூறுகின்றது. திக்கும் எல்லாக் காரியங்களுக்கும் நிமித்தகாரணம்.

ஆனமா ஞானத்திற்கிடமாயுள்ளது. அது இரண்டு விதம்; பரமான்மாவும், சீவான்மாவும் என்று. அவற்றுள் பரமான்மா ஈசுவரன, சர்வஞ்ஞன, ஒருவனே. சீவான்மா சரீ ரந்தோறும் வெவவேறும், விபுவும், நித்தியமுமாம.

ஞானத்திற்கு எ-து ஆன்மாவி னிலக்கணங் கூறுகின்றது அது இரண்டுவிதம் எ-து ஆன்மாவைப பகுக்கின்றது. ஈசுவரன் எ-து பரமான்மாவினிலக்கணங் கூறுகின்றது, நித்திய ஞானத்திற்கிடமாதல் ஈசுவரத்தன்மை அற்றேல், ஈசுவரனிருப்பில் யாது பிரமாணம், பிரத் தியக்ஷமன்று; உணடெனின பாகிய (வெளி) பிரத்தியக்ஷமா, ஆந்தர (உள்) பிரத்தியக்ஷமா? முன்னையதன்று உருவமற்ற திரவியமாகையால். பின்னையதுமன்று ஆன்மா, சுகம், துக்கம் முதலியவற்றினும் வேறுபட் டிருப்பதால். (ஆனமாவின் சுகதுக்காதிகளினும் வேறுதலாலெனினு மமையும்) அனுமானமுமன்று இலிங்கமின்மையால். ஆகமமுமன்று அவ்வாறான ஆகமமின்மையால் எனின்; அற்றன்று, 'க்ஷிதி (பிரு திவி) அங்குரம் (மரம், முளை) முதலியன கருத்தாவாலுண்டாம், காரிய

மாகையால், கடம்போல' என்னும் அனுமானம் பிரமாணமாதலால். உபாதானத்தைக் கோசரிக்கும் அபரோக்ஷஞானம், செய்யும் இச்சை, முயற்சி இவற்றையுடைமை கருத்தா (இயற்றுவோன்) தன்மையாம். உபாதானம் - சமவாயிகாரணம். சகல பரமாணு முதலிய சூக்குமங்களையுங் காண்கின்றபடியால் சர்வக்ஞனும். 'எவன் சர்வக்ஞனோ அவன் சர்வவித்து' என்ற ஆகமமும் பிரமாணம்.

சரீரந்தோறும் எ-து சீவான்மாவினிலக்கணங் கூறுகின்றது. சுக முதலியவற்றை யுடைமை சீவான்மாவினிலக்கணம். அற்றேல், மனுடன் யான் பிராம்மணன் யான் என்பன முதலியவற்றில் யாண்டும் யான் என்ற உணர்ச்சியில் சரீரமே விடயமாதலால் சரீரமே ஆன்மாவெனின்; அற்றன்று, சரீரம் ஆன்மாவாமேல் கை கால் முதலியன நாசமாங்கால் சரீர நாசத்தால் ஆன்மாவும் அழிந்ததெனல் வேண்டுமாகையால். இந்திரியங்களும் ஆன்மாவன்று. ஆன்மாவாமேல் 'எந்த யான் கடத்தைக் கண்டேனோ அந்த யானே இப்போது தொடுகின்றேன்' என்று தொடர்ந்துணர்தல் பொருந்தாது. ஆகையால் ஒருவன் அனுபவித்ததனை மற்றொருவன் அனுசந்தானஞ் செய்தல் பொருந்தாமை காண்க. கை கால் தேகேந்திரிய முதலியவற்றினும் வேறுபட்டவன் சீவான்மா. சுக முதலிய வேறுபாட்டால் சரீரந்தோறும் வெவ்வேறு. அவனும் பரமாணுப பரிமாணமன்று, சரீரமுழுவதும் வியாபித்த சுக முதலியவை விளங்காமை நேருமாதலின். மத்தியம (இடை) பரிமாணமுமன்று: அவ்வாறாயின் அநித்தியமாம், அதனால் கிருதநாச (செய்ததினழிவு) மும் அகிருத அப்யாகம (செய்யாததின் அடைவு) மும் ஏற்படுகின்றபடியால். ஆகையால் நித்தியன் விபு சீவான்மா.

மனம் சுகமுதலியன விளங்குதற்குச் சாதனமான இந்திரியம். அதுவும் உயிர்தோறும் நியத (இன்றியமையாமை) மாயிருத்தலால் அநேகமும், அணுவடிவமும், நித்தியமுமாம்.

சுகம் எ-து மனதினிலக்கணங் கூறுகின்றது. பரிசமின்றித் தொழிலுடையதாதல் மனதினிலக்கணம். அதுவும் எ-து மனதைப் பகுக்கின்றது. ஒவ்வொரு ஆன்மாவிற்கு ஒவ்வொரு மனம் அவசியம் வேண்டுமென்பதால் ஆன்மாக்களநேகமாகையால் மனமும் அநேகமென்பது பொருள். மத்தியம பரிமாணமுடையதாமேல் அநித்தியமாம்; அதனை

நீக்க மனம் பரமாணுவடிவம் எனப்பட்டது. அற்றேல், மனம் வியாபகம், பரிசமின்றிய திரவியமாதலால், ஆகாச முதலியவற்றைப்போல எனின்; அற்றன்று, மனம் விபு (நிறைவு)வாமேல ஆன்மமன சையோகமான அசமவாயிகாரணங்கூடாமையினால ஞானமுண்டாகாதென வருதலால். விபு இரண்டிற்குச் சையோகமுண்டெனல் கூடாது, அச்சையோகம் நித்தியமாகையால் சுழுத்தியில்லாமை நேருமாதலின், புரீததி (நாடி விசேடம)யினும் வேறுபட்ட பிரதேசத்தில ஆன்மமன சையோகம் எபபோது மிருத்தலால். அணுவாயினோ மனம் புரீததியில் அடங்கும்போது சுழுத்தியுண்டாம வெளியில் சஞ்சரிக்கும்போது ஞானமுண்டாம் என வரும் இதனால் அணுவடிவம் பெறபபட்டது.

## 2. குணம்.

உருவம கண் (விழி) மாத்திரத்தால கவரபபடுங் குணம். அதுவும வெண்மை, கருமை, பொன்மை, செம்மை, பசுமை, புகைமை, சித்திரம எனனும் பேதத்தினால் எழுவிதம. பிருதிவி, அபபு, தேயுககளிலிருபபது. அவற்றுள் பிருதிவியில எழுவிதம. விளங்காத வெண்மை அபபுவில. விளக்கமான வெண்மை தேயுவில்.

கண் எ - து உருவத்தினிலக்கணங் கூறுகின்றது. சங்கியை (எண்ணிக்கை) முதலியவற்றில் அதிவியாப்தியை நீக்க மாத்திரமென்றும் உருவத்தன்மையில் அதிவியாப்தியை நீக்க குணமென்றும் கூறப்பட்டது பிரபாபித்தி (ஒளிச்சுவர்) களின் சையோகத்திலுண்டாகும் அதிவியாப்தியைநீக்க விழிமாத்திரத்தால்கவரபபடும் சாதியையுடையது (உருவம்) என்று கூறவேண்டும். அதுவும் எ - து உருவத்தைப்பகுக்கின்றது. அற்றேல், அவ்வியாபபியவிருத்தி (வியாபியாமலிருத்தல்) யான கருமை முதலியவற்றின் கூட்டமே சித்திரவுருவமெனின்; அற்றன்று, உருவத்திற்கு வியாப்பியவிருத்தி (வியாபித்திருத்தல்) யே நியமமாகையால். அற்றேல், சித்திரபடத்தில் அவயவ (நூல்) உருவத்தினது தோற்றமிருக்குக எனின்; அற்றன்று, உருவமின்மையால் படம் பிரத்தியக்ஷமில்லை என்றவியவகாரம் ஏற்படுவதால். உருவமுடையதில் சமவேதித் (சமவாயசம்பந்த முடையதாய்) திருத்தல பிரத்தியக்ஷத்தை யுண்டு

பண்ணுவது எனல் கூடாது *கௌரவமாகையால். ஆகையால் படம் பிரத்தியக்ஷமாதல் பொருந்தாமையால் சித்திரவுருவம் பெறப்பட்டது. பிருதிவி எ-து உருவத்திற்கிருப்பிடங் கூறுகின்றது. அவற்றுள் எ-து இருப்பிடத்தைப் பிரித்துக் கூறுகின்றது.

இரசம் (சுவை) இரசனேந்திரியத்தால் கவரப்படுங் குணம். அதுவும் தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு (உப்பு), கார்ப்பு (காரம்), கசப்பு, துவர்ப்பு என்னும் பேதத்தினால் ஆறுவிதம். பிருதிவி அப்பு இவற்றிலுள்ளது. பிருதிவியில் ஆறுவிதம்; அப்புவில் மதுரமொன்றே.

இரசன எ-து இரசத்தினிலக்கணங் கூறுகின்றது. இரசத்தன்மையில் அதிவியாப்தியை நீக்கக்குணமெனப்பட்டது பிருதிவி எ-து இரசத்திற்கு இருப்பிடங் கூறுகின்றது. பிருதிவியில் எ-து இருப்பிடத்தைப் பகுத்துக் காட்டுகின்றது.

கந்தம் கிராணஇந்திரியத்தால் கவரப்படுங்குணம். அதுவும் இரண்டுவிதம்; நற்கந்தம் துர்க்கந்தம் என. பிருதிவிமாத்திரத்திலிருப்பது.

கிராணம் எ-து கந்தத்தினிலக்கணங் கூறுகின்றது, கந்தத்தன்மையில் அதிவியாப்தியை நீக்கக் குணமெனப்பட்டது.

பரிசம் துவக்கு இந்திரிய மாத்திரத்தால் கவரப்படுங் குணம். அது மூன்றுவிதம்; சீதம், உஷ்ணம், சீதமும் உஷ்ணமும் இல்லாதது என்னும் பேதத்தினால். பிருதிவி, அப்பு, தேயு, வாயு இவற்றிலுள்ளது. அவற்றுள் சீதம் அப்புவில், உஷ்ணம் தேயுவில், சீதமும் உஷ்ணமுமில்லாதது பிருதிவி வாயுக்களில.

---

*சாக்ஷாத்சம்பந்தத்தால் உருவம் பிரதியக்ஷத்தை யுண்டாக்குவது என்று கூறுவ(இலாகவம்)தினும் தனது (உருவம்) ஆசிரய (நூல்) த்தில் சமவேதித்திருக்கும் வடிவ பரம்பரை (சுவ சமவேத சமவாயம்) ச்சம்பந்தத்தால் உருவம் ஆடையிலிருந்து பிரத்தியக்ஷத்தை யுண்டாக்குகின்றது என்பது கௌரவ (மிகை) மாம்.

தூவக்கு எ-து பரிசத்தினிலக்கணங் கூறுகின்றது, பரிசத்தன் மையில் அதிவியாப்தியை நீக்கக் குணமென்றும் சையோக முதலியவற் றில் அதிவியாப்தியை நீக்க மாத்திரமென்றுங் கூறப்பட்டது.

உருவமுதலிய நான்கும் பிருதிவியில் பாகத்தாற் றேன்று வனவும் அநித்தியமுமாம். மற்ற விடங்களில் பாகததாற் றேன்றுதனவாய் நித்தியமும் அநித்தியமுமாம். நித்தியத் தைச் சேர்ந்தவை நித்தியம், அநித்தியத்தைச் சேர்ந்தவை அநித்தியம்.

பாகத்தாற் றேன்றுவன எ - து பாகம் - தேயுவின் சையோகம், அதனுல் முன்னுருவம் அழிந்து வேற்றுருவமுண்டாகின்றதென்பது பொருள். ஈண்டுப் பரமாணுக்களிலேயே பாகம், துவியணுக முத லியவற்றிலன்று, சுள்ளையில்வைத்த பக்குவமாகாத பசுங்குடங்கெட்டுப் பரமாணுக்களில் வேற்றுருவமுண்டாகும்போது மீண்டும் துவியணுக முதலிய முறையானே செங்குடத்தி னுத்பத்தியாம். ஆண்டு (பரமா ணுவின் செம்மைக்கு) பரமாணுக்கள் சமவாயிகாரணம், தேயுவின் சையோகம் அசமவாயிகாரணம், அதிருஷ்ட முதலியன நிமித்தகார ணம், துவியணுக முதலியவற்றின் உருவத்தில் காரண (பரமாணு) உரு வம் அசமவாயிகாரணம் என்று பீலுபாகவாதிகளான வைசேடிகர் கூறு வர் முன் கடத்திற்கு நாசமில்லாமலேயே பரமாணுமுடிவான அவய வம் அவயவி இவைகளில் ஒரேகாலத்தில் வேற்றுருவத்தி னுத்பத்தி யென்று (அவயவியில் பாகம் ஒப்பும்) பிடரபாகவாதிகளான நையாயிகர் கூறுவர். இதனுனேயே (பாகத்தால் தோன்றுதல்) பிருதிவி பரமாணுக் களிலுள்ள உருவமுதலானவை அநித்தியம் என்பது பொருள் மற்ற விடங்களில் (என்றது) அப்புமுதலானவற்றில் என்பதுபொருள் நித்தி யத்தைச் சேர்ந்தவை எ-து பரமாணுவிலுள்ளவை என்பது பொருள். அநித்தியத்தைச் சேர்ந்தவை எ-து துவியணுக முதலியவற்றிலுள்ளவை என்பதுபொருள். உருவமுதலிய நான்கும் உத்பூதமாயுள்ளன பிரத்தி யக்ஷம். அநுத்பூதமாயுள்ளன அப்பிரத்தியக்ஷம். உத்பூதம் பிரத்தியக்ஷ த்தை யுண்டாக்கும் தருமம். அஃதின்மை அநுத்பூதம். பீலு - பர மாணு. பிடரம் - பிண்டம்.

சங்கியை ஒருமைமுதலிய வியவகாரகாரணம். அது ஒன்பதுபொருளிலு முள்ளது *ஒருமைமுதல் பரார்த்தம் வரை யுள்ளது. ஒருமை நித்தியமும் அநித்தியமுமாம். நித்தியத்திலுள்ளது நித்தியம அநித்தியத்திலுள்ளது அநித்தியம். இருமைமுதலியன யாண்டும் அநித்தியமேயாம்.

ஒருமை எ - து சங்கியையின் இலக்கணங் கூறுகின்றது.

பரிமாணம் அளத்தல் வியவகாரத்திற்கு 'அசாதாரண காரணம். ஒன்பதுபொருளிலு முள்ளது. அது நான்குவிதம்; அணு - நுட்பம், மகத்து - பெரிது, இருசுவம் - குறிது, தீர்க்கம் - நெடிது என்னும் பேதத்தால்.

அளத்தல் எ - து பரிமாணத்தின் இலக்கணங் கூறுகின்றது. அது எ - து பரிமாணத்தைப பகுக்கின்றது (அணு பரிமாணத்தை அணுத்தன்மை எனல்வேண்டும். அணுவென்பது திரவியம்; இதனுல் பரிமாணகுணம் உணாத்தப்படாது. ஈண்டு) பொருட் பிரதானத்தால் அணுவெனப்பட்டது. (அதனுல்) அணுத்துவம் - நுண்மை, மகத்துவம் - பெருமை, இருசுவத்துவம் - குறுமை, தீர்கத்துவம் - நெடுமை எனப்பொருள்கொள்க.

வேற்றுமை வேறென்னும் வியவகாரத்திற்கு அசாதாரண காரணம். அது எல்லாத்திரவியங்களிலு மிருப்பது.

வேறு எ - து வேற்றுமையி னிலக்கணங் கூறுகின்றது. இது இதனின்றும் வேறு என்னும் வியவகாரத்திற்குக் காரணமென்பதுபொருள்.

* ஏகம் ஒன்று. தசம் - பத்து சதம் - நூறு. சஹஸ்ரம் - ஆயிரம். அயுதம் - பதினுயிரம். லக்ஷம் - நூறாயிரம. நியுதம்-பத்துலக்ஷம். கோடி - நூறுலக்ஷம் அற்புதம் - பத்துகோடி. விருந்தம் - நூறுகோடி. கர்வம் - ஆயிரங்கோடி. நிகர்வம் - பதினுயிரங்கோடி. சங்கம் - லக்ஷங்கோடி. பத்மம் - பத்துலக்ஷங்கோடி, சாகரம் - கோடிகோடி. அந்தியம் - பத்துக்கோடிகோடி. மத்திமம் - நூறுகோடி கோடி. பரார்த்தம் - கோடிகோடி கோடியே.

சையோகம் கூடியது என்னும் வியவகாரத்திற்குக் காரணம். அது எல்லாத்திரவியங்களிலு மிருப்பது.

கூடியது எ-து சையோகத்தி னிலக்கணங் கூறுகின்றது. இவ்விரண்டுங் கூடியுள்ளன என்ற வியவகாரத்திற்குக் காரணமென்பது பொருள் சங்கியை முதலியவற்றின் இலக்கணங்களிலும் எல்லாத் திக்கு காலங்களிலும் அதிவியாப்தியை நீக்க அசாதாரணம் என்று (விசேடணங்) கூறவேண்டும் சையோகம் இரண்டுவிதம்; கருமத்தா லுண்டானதும், சையோகத்தா லுண்டானதும் என. முதலது அஸ்தத்தின் கருமத்தால் அஸ்த புஸ்தகங்களின் சையோகம். இரண்டாவது அஸ்த புஸ்தக சையோகத்தால் காய புஸ்தக சையோகம். * சையோகம் அவ்வியாப்பிய விருத்தியாம் தனது அத்தியந்தாபாவ சமான அதிகரணத்திலிருப்பது எதுவோ அது அவ்வியாப்ய விருத்தியாம்.

விபாகம் சையோகத்தை அழிக்கும் சிறந்தகுணம், அது எல்லாத்திரவியங்களிலு மிருப்பது.

சையோகத்தை எ-து விபாகத்தி னிலக்கணங் கூறுகின்றது. கால முதலியவற்றில் அதிவியாபதியை நீக்கக் குணமென்றும், உருவ முதலியவற்றில் அதிவியாப்தியை நீக்கச் சையோகத்தை அழிப்பது என்றும், ஈசுவர இச்சை ஞான முதலியவற்றில் அதிவியாப்தியை நீக்கச் சிறந்த வென்றுங் கூறியவாறு. அற்றேல், 'சிறந்த' என்பதைக் கவரும் போது 'குணம்' என்றபதம் பயனில்லை எனின்; அற்றன்று, கிரியையிலுண்டாகும் அதிவியாப்தியை நீக்கக் குணமென்னும் பதமும் முக்கியமாவதால். விபாகமும் இரண்டுவிதம்; கருமத்தா லுண்டாவதும், விபாகத்தா லுண்டாவதும் என்று. முதலது அஸ்தத்தின் கிரியையால் அஸ்த புஸ்தகங்களின் விபாகம். இரண்டாவது அஸ்த புஸ்தகங்களின் விபாகத்தினால் காய புஸ்தகங்களின் விபாகம் (விபாகம் - பிரிவு).

பரத்துவாபரத்துவங்கள் முன் பின் என்ற வியவகாரங்களுக்கு அசாதாரண காரணங்கள். அவை பிருதிவிமுதலிய நானகினும் மனத்தினு மிருப்பன. அவ்விரண்டும்

* தானும் தனது அந்தியந்தாபாவமும் ஒரு யிடத்திலிருப்பதால் சையோகம் அவவியாப்ய விருத்தி என்பது சம்பிரதாயம்.

விதங்கள்; திக்கினாற் பண்ணப்பட்டனவும் காலத்தினாற் பண்ணப்பட்டனவும் என்று. தூரத்திலுள்ளதில் திக்கினால் பண்ணப்பட்ட பரத்துவம். சமீபத்திலுள்ளதில் திக்கினால் பண்ணப்பட்ட அபரத்துவம். மூத்தோனிடத்தில் காலத்தினால் பண்ணப்பட்ட பரத்துவம். இளையோனிடத்தில் காலத்தினால் பண்ணப்பட்ட அபரத்துவம்.

முன் பின் என்பன பரத்துவ அபரத்துவங்களின் இலக்கணங் கூறுகின்றன 'முன் என்னும் வியவகாரத்திற்கு அசாதாரண காரணம் பரத்துவம் (முன்மை), பின் என்னும் வியவகாரத்திற்கு அசாதாரண காரணம் அபரத்துவம் (பின்மை)' என்பது பொருள். இரண்டு விதங்கள் எ - து அவ்விரண்டையும் பகுக்கின்றது. தூரத்திலுள்ளதில் எ - து திக்கினாற் பண்ணப்பட்டவற்றிற்கு உதாரணங் கூறுகின்றது. மூத்தோனிடத்தில் எ - து காலத்தினாற் பண்ணப்பட்டவற்றிற்கு உதாரணங் கூறுகின்றது

குருத்துவம் ஆதியின் வீழ்ச்சிக்கு அசமவாயிகாரணம். அது பிருதிவியிலும் அப்புவிலு முள்ளது.

னை எ - து குருத்துவத்தின் இலக்கணங் கூறுகின்றது இரண்டாவது முதலிய வீழ்ச்சிக்கு வேகம் அசமவாயி காரணமாகையால் வேகத்தில் அதிவியாப்தியை நீக்க ஆதியின் எனப்பட்டது.

திரவத்துவம் ஆதியில் ஒழுகுவதற்கு அசமவாயி காரணம். பிருதிவி அப்பு தேயுக்களி லிருப்பது. அது இரண்டு விதம்; சாம்சித்திகம் (இயல்பாயுள்ளது), நைமித்திகம் (நிமித்தத்தாலுள்ளது) என்று. இயல்பாயுள்ளது அப்புவில். நிமித்தத்தாலுள்ளது பிருதிவி தேயுக்களில். பிருதிவியில் நெய் முதலியவற்றில் தேயுசம்பந்தத்தினா லுண்டாகும் திரவத்துவம். தேயுவில் சுவர்ண முதலியவற்றிலுண்டாவது.

ஆதியில் ஒழுகு எ - து திரவத்தன்மையின் இலக்கணங் கூறுகின்றது. தேயு சையோகத்தினா லுண்டாவது நிமித்தத்தினாலாவது அதற்கு வேறானது இயல்பாயுள்ளது. நெய் முதலியவற்றில எ - து பிருதி

வியில் நிமித்தத்திஞ லானதற்கு உதாரணங் கூறுகின்றது. சுவர்ண முதலியவற்றில் எ - து தேயுவில் அதனைக் கூறுகின்றது

சிநேகம் பொடி முதலியவற்றைப் பிண்டவடிவமாக்கு வதற்குக் காரணமான குணம். அது அப்புவில மாத்திர மிருப்பது.

பொடி முதலியவற்றை எ - து சிநேகத்தி னிலக்கணங் கூறுகின்றது கால முதலியவற்றில் அதிவியாபதியை நீக்கக குணமென்றும், உருவ முதலியவற்றில அதிவியாப்தியை நீக்கப பிண்டவடிவ மாக்கு வதற்கு என்றுங் கூறபபட்டது

சத்தம செவியாற் கவரப்படுங் குணம். ஆகாசமாத்திரத் திருப்பது. அஃதிரண்டுவிதம; சத்தவடிவமும வர்ணவடிவ மும என்று. சத்தவடிவம பேரிகை முதலியவற்றி லுண்டா வது, வர்ண (எழுத்து) வடிவம் சமஸ்கிருத பாஷை முதலிய வடிவம.

செவியால் எ - து சத்தத்தி னிலக்கணங கூறுகின்றது. சத்தத் தன்மையில் அதிவியாப்தியை நீக்கக குணமென்றும், உருவ முதலிய வற்றில அதிவியாபதியை நீக்கச செவியாலெனறுங் கூறப்பட்டது. சத் தம் மூனறுவிதம்; சையோகத்தா லுண்டாவதும், விபாகத்தா லுண்டா வதும், சத்தத்தாலுண்டாவது மென்று. அவற்றுள் முதலது பேரி கைக்கும் தண்டத்திற்கும் உண்டாகுஞ் சையோகத்தா லாவது. இரண் டாவது மூங்கிலைப் பிளக்கும்போது இரு பாதியின் விபாகத்திஞலாகி ன்ற சடசட சத்தம். பேரிகை முதலிய இடங்தொடங்கிச் செவிவரை யுண்டாகும இரண்டாவது முதலிய சத்தங்கள் சத்தத்தாலாவன,

புத்தி சகல வியவகாரங்களுக்குங் காரணமான ஞான குணம. அது இரணடுவிதம்; ஸ்மிருதி (நினைவு) யும், அநு பவமும் என்று.

சகல எ - து புத்தியி னிலக்கணங் கூறுகின்றது. கால முதலிய வற்றில் அதிவியாப்தியை நீக்கக் குணமென்றும், உருவ முதலியவற் றில் அதிவியாப்தியை நீக்கச் சகல வியவகாரமென்றுங் கூறப்பட்டது.

அறிகின்றேன் என்ற அநுவியவசாய (வியவசாய ஞானத்தைக் கோசரிப்பது) ஞானத்தால் கோசரிக்கப்படும ஞானத்தன்மையே இலக்கணமென்பது பொருள். அது எ - து புத்தியைப் பகுக்கின்றது

ஸ்மிருதி சம்ஸ்கார (வாசனை) மாத்திர ஜந்திய ஞானம். அதின் வேறான ஞானம் அனுபவம், அது இரண்டுவிதம்; யதார்த்தமும் அயதார்த்தமும் என்று. அதையுடையதன்கண் அது விசேஷணமாகத் தோன்றும் அநுபவம் யதார்த்தம் இது கடம் என்னும் ஞானம்போல. அதுவே பிரமை என்று சொல்லப்படுகின்றது.

சம்ஸ்கார எ - து ஸ்மிருதியி னிலக்கணங் கூறுகின்றது இது பாவனை என்னும் பெயருடைய சமஸ்காரமாம். சமஸ்காரத்தி னழிவில் அதிவியாபதியை நீக்க ஞானமென்றும், கடமுதலியவற்றின் பிரத்தியக்ஷத்தில் அதிவியாப்தியை நீக்க சமஸ்கார ஜந்தியமென்றும் பிரத்தியபிக்ஞை (நினைவோடுங் கூடிய பிரத்தியக்ஷம)யில் அதிவியாபதியை நீக்க மாத்திரமென்றுங் கூறியது.

அதின் வேறு எ - து அநுபவத்தி னிலக்கணங் கூறுகின்றது. 'ஸ்மிருதியின் வேறான ஞானம் அநுபவம்,' என்பது பொருள். அது இரண்டுவிதம் எ - து அநுபவத்தைப் பகுக்கின்றது. அதனை யுடையதன்கண் எ - து யதார்த்த அநுபவத்தி னிலக்கணங் கூறுகின்றது. அற்றேல், 'கடத்தில் கடத்தன்மை' என்னும் பிரமையில் அவ்வியாப்தியாம் கடத்தன்மையில் கடமின்மையால் எனின்; அற்றன்று, 'யாண்டு எதன்சம்பந்த மிருக்கின்றதோ ஆண்டு அதன்சம்பந்தத்தின் அநுபவம்' என்னும் பொருளாகலின். கடத்தன்மையிலும் கடசம்பந்த மிருக்கின்றது என்பதால் அவ்வியாப்தியில்லை எனவுணர்க. அதுவே எ - து யதார்த்த அநுபவமே சாத்திரத்தில் 'பிரமை' என்று சொல்லப் படுகின்றது என்பது பொருள்.

அயதார்த்தம் அது இல்லாததில் அதை விசேடணமாக உடைய அநுபவம்.

அது இல்லாததில் எ - து அயதார்த்த அநுபவத்தி னிலக்கணங் கூறுகின்றது. அற்றேல், 'இது ஸம்யோகமுடையது' என்ற பிரமை

யில் அதிவியாபதி எனின், அற்றன்று, * எதன் வரைவால் எதன் சம்பந்தத்தின் அபாவமோ, அதன் வரைவால் அதன் சம்பந்தஞான (அயதாா்த்த அநுபவம்) மே சொல்ல விரும்பினபடியால்; சையோக அபாவமுடையதன் வரைவால் சையோகஞானம் அயதார்த்த அநுபவமாகையால் சையோகமுடையதன் வரைவால் சையோகசம்பந்த மிருத்தலினால் அதிவியாப்தி இல்லை எனவுணர்க.

யதார்த்த அநுபவம் நான்குவிதம்; பிரத்தியக்ஷம், அநுமிதி, உவமிதி, சாப்தம் என்னும் பேதத்தினால். அவற்றின் காரணமும் நான்குவிதம்; பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சப்தம் என்னும் பேதத்தினால்.

யதார்த்த எ - து யதார்த்த அநுபவத்தைப் பகுக்கின்றது. அவற்றின் காரணம் எ - து பிரசங்க (தொடர்பு) த்தினால் பிரமையின் காரணத்தைப் பகுக்கின்றது. பிரமையின் காரணம் என்றபடி. பிரமையின் காரணம் பிரமாணம் என்பது பிரமாணத்தின் சாமானிய இலக்கணம்.

கரணம் அசாதாரண (சிறப்பு) காரணம்.

அசாதாரணம் எ - து கரணத்தின் இலக்கணங் கூறுகின்றது. சாதாரண காரணமான திக்கு காலமுதலியவற்றில் அதிவியாப்தியை நீக்க அசாதாரணமெனப்பட்டது.

காரணம் காரியத்திற்கு நியத (இன்றியமையாதது அல்லது, வியாபகம்) மாய் முன்னிற்பது.

காரியத்திற்கு எ - து காரணத்தி னிலக்கணங் கூறுகின்றது. 'முன்னிற்பது காரணம்' என்று சொல்லும்போது (மண் சுமந்துவந்த) கழுதை முதலியவற்றில் அதிவியாப்தியாம் அதனைநீக்க நியதமாய் எனப்பட்டது. அவ்வளவு (நியதம்) மாத்திரங் கூறினால் காரியத்தில் அதிவியாப்தியாம் ஆகையால் முன்னிற்பது எனப்பட்டது

---

* சையோக அபாவமுடைய மூல (வேர்) த்தின் அவச்சேதக (வரைவு) கமாக விருக்ஷத்தில் வானர சையோகசம்பந்த ஞானம் அயதார்த்தமாம். சையோகமுடைய கிளையின் அவச்சேதகமாக விருக்ஷத்தில் வானரசையோக மிருத்தலால் அதிவியாப்தியில்லை என்பது பொருள்.

அற்றேல், நூலின் உருவம் படத்தைக்குறித்துக் காரணமாகின்றதெனின்; அற்றன்று, 'அநந்யதாசித்த (வேறோர் விதத்தா லடையப்படாதது) மாய்' என்ற (காரணவிலக்கணத்திற்கு) விசேடண மாதலின். அநந்யதாசித்தம் அநந்யதாசித்தி யின்மை. அந்யதாசித்தி (வேறோர் விதத்தால் அடையப்படுவது) மூன்றுவிதம்; எதனோடுகூடியே எது எதனைக்குறித்து முன்னிற்பதாய் அறியப்படுகின்றதோ அது அதனானே அந்யதாசித்தம்; அது நூலோடுங் கூடியதாய் நூலுருவம் அல்லது நூற்றன்மை படத்தைக்குறித்து முன்னிற்பதென்றுணரப்படுவது ஒன்று. மற்றொன்றனைக்குறித்து முன்னிற்பதாய் அறியப்படும்போது எது எதனைக்குறித்து முன்னிற்பதாக அறியப்படுகின்றதோ அதனைக்குறித்து அது அந்யதாசித்தம்; அது சத்தத்தைக்குறித்து முன்னிற்பதாக அறியப்படும்போதே படத்தைக்குறித்து ஆகாசம் முன்னிற்பதாக வுணரப்படுவது ஒன்று மற்றவிடத்திலே துணியப்பட்டு நியதமாய் முன்னிற்பதனாலேயே காரியந்தோன்றும்போது அதனோடுங் கூடிநிற்பது அந்யதாசித்தம்; அது பாகத்தா லுண்டாகுமிடத்தில் கந்தத்தைக்குறித்து உருவத்தின் பிராகபாவம் முன்னிற்பதென்றுணரப்படுவது ஒன்று என மூன்று முணர்க. இங்ஙனங் கூறியவாற்றால் அநந்யதாசித்தமாய் நியதமாய் முன்னிற்பதே காரணமாம்.

காரியம் பிராகபாவ (முன்னின்மை) த்திற்குப் பிரதியோகி (எதிர்மறை.)

பிராகபாவ எ - து காரியத்தி னிலக்கணங் கூறுகின்றது.

காரணம் மூன்றுவிதம்; சமவாயி, அசமவாயி, நிமித்தம் என்னும் பேதத்தினால். எதனிடத்தில் சமவேதித்து (ஒற்றுமை யுடையதாய்) காரிய முண்டாகின்றதோ அது சமவாயி காரணம்; அது நூல்கள் படத்திற்கும் படமுந் தன்னிடமுள்ள உருவ முதலியவற்றிற்குமாம். காரியத்தோடாவது காரணத்தோடாவது ஒருதிரவியத்தில் சமவேதி (ஒற்றுமைப்பட்டதாய்)த்திருந்து எது காரணமாகின்றதோ அது அசமவாயி காரணம்; அது நூலின் சையோகம் ஆடைக்கும், நூலின் உருவம் ஆடை உருவத்திற்குமாம். இவ்விரண்டின் வேறான

காரணம் நிமித்தகாரணம்; அது துரி (நூற்பாவைத்திருத்தும் படைமயிர்), வேமா (நாடா) முதலியன ஆடைக்காம். இம் மூவகைக் காரணங்களுள் எது அசாதாரண காரணம் அதுவே கரணம்.

காரணம் எ - து காரணத்தைப் பகுக்கின்றது.

எதனிடத்தில எ - து சமவாயிகாரணத்தி னிலக்கணங் கூறுறது.

காரியத்தோடு எ - து அசமவாயி காரணத்தி னிலக்கணங் கூறுகின்றது.

நூலின் சையோகம் எ - து காரியத்தோடு என்பதற்கு உதாரணங் கூறுகின்றது காரியத்தோடு - தன்காரியமான படத்தோடு, ஒருதிரவியத்தில் - நூலின்கண், சமவேதித் திருத்தலால் நூலின் சையோகம் படத்திற்கு அசமவாயி காரணம் என்பது பொருள்.

நூலின் உருவம் எ - து காரணத்தோடு என்பதற்கு உதாரணங் கூறுகின்றது. காரணத்தோடு - தனது சமவாயிகாரணமான படத்தோடு, ஒருதிரவியத்தில் - நூலின்கண், சமவேதித்திருத்தலால் நூலின் உருவம் படத்தின் உருவத்திற்கு அசமவாயி காரணம் என்பது பொருள்.

ரண்டின வேறான எ - து நிமித்த காரணத் கூறுகின்றது. சமவாயி காரணத்திலும், அசமவாயி காரணத்திலும் வேறான காரணமென்பது பொருள்.

இம் மூவகைக் காரணம் எ - து காரணத்தின் இலக்கணத்தை

## பிரத்தியக்ஷப் பிரமாணம்.

அவற்றுள், பிரத்தியக்ஷப் பிரமாணம் பிரத்தியக்ஷ ஞானத்திற்குக் கரணம். பிரத்தியக்ஷம (புலப்படக் காணும் காக்ஷியறிவு) இந்திரியார்த்தங்களின் சம்பந்தத்தாலுண்டாகும் ஞானம். அது இரண்டுவிதம்; நிருவிகற்பமும் சவிகற்பமும் என்று. அவற்றுள் விசேடணமின்றிய ஞானம் நிருவிகற்பம். விசேடணமுடைய ஞானம் சவிகற்பம்; அது சிறு

வன் இவன், பிராம்மணன் இவன், கரியன் இவன் என்று விசேடணத்தோடு தோன்றும் ஞானம்.

*அவற்றுள் - பிரமாணம் நான்கனுள் பிரத்தியக்ஷஞான எ-து பிரத்தியக்ஷ பிரமாணத்தி னிலக்கணங் கூறுகின்றது. இந்திரியார்த்தங்களின் எ - து பிரத்தியக்ஷஞானத்தி னிலக்கணங் கூறுகின்றது. இந்திரியம் கண்முதலியன, அர்த்தம் கடமுதலியன, அவ்விரண்டின் சம்பந்தம் சையோக முதலியன, அதனாலுண்டாவது ஞானம் என்பது பொருள். அது இரண்டுவிதம் எ - து அதனை பகுக்கின்றது. விசேடண மின்றிய எ-து நிருவிகற்பத்தி னிலக்கணங் கூறுகின்றது விசேடணத்தையும், விசேடியத்தையும், சம்பந்தத்தையும் கவராத ஞானமென்பது பொருள். (ஆகவே மூன்றுவிதம் நிருவிகற்பம்)*

*அற்றேல், நிருவிகற்பத்தில் யாது பிரமாணமெனின் ; அற்றன்று, கோ என்ற விசிட்டஞானம் விசேடண ஞானத்தாலுண்டாவது, விசிட்டஞான மாவதால், தண்டி என்னும் ஞானம்போல ; என்னும் அனுமானம் பிரமாணமாகலான். விசேடணஞானமும் சவிகற்பமெனின் அநவஸ்தை நேருமாதலால், நிருவிகற்பம் சித்தித்தது. விசேடணமுடைய ஞானம் எ - து சவிகற்பஞானத்தி னிலக்கணங் கூறுகின்றது. பெயர் சாதிமுதலான விசேடணத்தையும், விசேடியத்தையும், சம்பந்தத்தையும் கவரும் ஞானமென்பது பொருள். சிறுவன் எ - து சவிகற்பத்திற் குதாரணங்*

*பிரத்தியக்ஷ ஞானத்திற் கேதுவான இந்திரிய அர்த்தங்களின் சம்பந்தம் ஆறுவிதம்; சையோகம், சையுக்த சமவாயம், சையுக்த சமவேத சமவாயம், சமவாயம், சமவேத சமவாயம், விசேடண விசேடிய பாவம் (தன்மை) என்பன. கண்ணொடு கடத்தின் பிரத்தியக்ஷமுண்டாவதில் சையோகம் சம்பந்தம் 1. கடவுருவத்தின் பிரத்தியக்ஷத்தில் சையுக்த சமவாயம் சம்பந்தம் ; கண்ணோடு சையுக்தமான கடத்தில் உருவம் சமவாயமாயிருத்தலால் 2. உருவத்தன்மை சாமானியத்தின் பிரத்தியக்ஷத்தில் சையுக்த சமவேத சமவாயம் சம்பந்தம் ; கண்ணோடு சையுக்தமான கடத்தில் உருவம் சமவேதம், அதில்*

உருவத்தன்மை சமவாயமாதலினால் 3. செவியால் சத்தத்தின் சாக்ஷாத்காரத்தில் சமவாயம் சம்பந்தம்; செவித்துளையிலி ருக்கும் ஆகாசம செவியாதலாலும், சத்தம ஆகாசத்தின் குண மாதலாலும், குண குணிகளுககும் சமவாய மாதலினால் 4. சத்தத்தன்மை சாக்ஷாத்காரத்தில சமவேத சமவாயம் சம்பந் தம்; செவியில் சமவேதமான சத்தத்தில் சத்தத்தன்மை சம வாயமாதலின் 5. அபாவப் பிரத்தியக்ஷத்தில் விசேடண விசே டிய பாவம் சம்பந்தம்; கடாபாவமுடையது பூதலம் என்னுமி டத்தில் கண்ணோடு சையுக்தமான பூதலத்தில் கடாபாவம் விசேடணமா யிருத்தலின் 6. இங்ஙனம் சம்பந்தம ஆறானு முண்டான ஞானம் பிரத்தியக்ஷம். அதற்குக் காரணம் இந்தி ரியம். ஆகையால இந்திரியம் பிரத்தியக்ஷப் பிரமாணம் என்று சித்திததது. பிரத்தியக்ஷம் உரைக்கபபட்டது.

பிரத்தியக்ஷ எ-து இந்திரியார்த்தங்களின் சம்பந்தத்தைப் பகுக்கின் றது.

கண்ணால் எ - து சையோக சம்பந்தத்திற் குதாரணங் கூறுகின் றது. திரவியப பிரத்தியக்ஷத்தில் யாண்டும் சையோகம் சம்பந்தமென்பது பொருள். ஆன்மா மனதோடும், மனம் இந்திரியத்தோடும், இந்திரியம் திரவியத்தோடுங் கூடுகின்றது; அதனின்றும் பிரத்தியக்ஷஞான முண் டாகின்றது.

கடவுருவம் எ - து சையுக்த சமவாயத்திற் குதாரணங் கூறுகின் றது. கண்ணோடு சையுக்தமான எ-து அதில் யுக்தியைக் கூறுகின்றது.

உருவத்தன்மை எ-து சையுக்த சமவேத சமவாயத்திற் குதாரணங் கூறுகின்றது.

செவியால் எ-து சமவாயத்திற் குதாரணங் கூறுகின்றது. செவித் துளை எ - து அதை விளக்குகின்றது.

அற்றேல், தூரத்திலுள்ள சத்தம் எங்ஙனஞ் செவியோடு சம்பந்த மாகின்றதெனின்; அற்றன்று, வீசிதரங்க (ஆண் அலை பெண் அலை) நியாயத்தினாலாவது கதம்பமுகுள (ஒரே காலத்தில் எல்லாப்பக்கமும் மலரும் மொட்டு) நியாயத்தினாலாவது (நியாயம் - திருஷ்டாந்தம்) சத்

தத்தினின்றும் வேறு சத்த முண்டாங் கிரமமாக செவிதேசத்திலுண் டானதற்கு செவிச்சம்பந்தத்தினுல் பிரத்தியக்ஷம் சம்பவிக்கின்றபடியால்.

சத்தத்தன்மை எ-து சமவேத சமவாயத்திற் குதாரணங் கூறுகின் றது.

அபாவம் எ - து விசேடண விசேடிய பாவத்திற் குதாரணங் கூறு கின்றது கடாபாவ முடையது எ - து அதை விளக்குகின்றது. பூதலம் விசேடியம், கடாபாவம விசேடணம் 'பூதலத்தில் கட மில்லை' என்னுமிடத்தில கடாபாவம் விசேடியமென அறிய வேண் டும். இதனுல் அநுபலபதி (விளஙகாமை) வேறு பிரமாண மென்பது மறுக்கப்பட்டது 'ஈணடுக கடமிருப்பின் அபபொழுது பூதலம்போலக் காணபபடும் ; காணப்படாமையால் இல்லை' என்று தாக்கி (ஆக்ஷேபி)க் கபபட்ட பிரதியோகியின் இருபபிற்கு விரோதியான அநுபலப்தியைச் சககாரியாகக் கொணட இநதிரியத்திஞனேயே அபாவஞான முண் டாகும்போது அநுபலபதி வேறு பிரமாணமென்பது பொருந்தாமை யானும், அதிகரண ஞானத்தின் பொருட்டு விருபபப படுவதாகிய இந் திரியமே காணமாகப பொருந்தும்போது அநுபலபதி காணமென்பது பொருந்தாமையானுமாம். விசேடண விசேடிய பாவமென்பது விசே டண விசேடிய சொரூபமே ; அவற்றினும் வேறுபட்ட சமபந்த மன்று இங்ஙனஞ் சம்பந்தம் எ - து பிரத்தியக்ஷ ஞானத்தை முடிப்பதாய் அதற்குக் காணங் கூறுகின்றது அசாதாரண காரணமாவதால் இந் திரியம் பிரத்தியக்ஷ ஞானத்தின் காணமென்பது பொருள் ஆகையால் எ - து பிரத்தியக்ஷத்தை முடிக்கின்றது.

இங்ஙனம் தருக்க சங்கிரக தீபிகையில் பிரத்தியக்ஷப்
பிரமாணம் முற்றிற்று

## அனுமானப் பிரமாணம்.

அநுமானம் அநுமிதிகாணம். அநுமிதி பாாமரிச (ஆராய்ச்சி) த்தா லுண்டான ஞானம்.

அநுமிதி காணம் எ - து அநுமானத்தி னிலக்கணங் கூறுகின் றது. பாாமரிச எ - து அநுமிதியி னிலக்கணங் கூறுகின்றது. அற

றேல், சமுசயத்தின் பின்னருண்டாகும் பிரத்தியக்ஷத்தில் அதிவியாப்தி யாம், தாணு புருஷ (கட்டையா புருஷனா என்னும்) சமுசயத்தின பின்னர் 'புருஷத் தன்மையின் வியாப்பியமான கை முதலியவற்றை யுடையவன் இவன்' என்று பராமரிச முண்டாகும்போது 'புருஷனே' என்று பிரத்தியக்ஷ ஞான முண்டாகின்ற படியால். ஆண்டு அநுமிதியே யெனல் கூடாது 'புருஷனைச் சாக்ஷாத்கரிக்கின்றேன்' என்னும் அநுவியவசாய (முன்னுணர்வை யுணர்வது) ஞானத்திற்கு விரோதமாதலின் எனின்; அற்றன்று, பக்கத்தன்மையோடு கூடிய பராமரிசத்தால் உண்டானதென்று சொல்லக் கருதியதனால். * துணியுமிச்சை இன்மையோடுகூடின சாத்தியபாவ ஞான மின்மை பக்கத்தன்மை. சாத்தியத்தின் பாவஞானம் அனுமிதியைப் பிரதிபந்திப்பது, பாவஞான மிருப்பினும் 'அனுமிப்பேன்' என்ற இச்சை இருக்கும்போது அனுமிதி (நிகழ்க) காணப்படுவதால், துணிய வேண்டுமென்ற இச்சை மாற்று (தடையை நீக்குவது), அதனால் மாற்றின் அபாவத்தோடுங் கூடின மணியின் அபாவம (நெருப்பு) சுடுதற்குக்காரணமா

* துணிய வேண்டுமென்ற இச்சையின் அபாவம் விசேடணம், சாத்திய பாவ ஞானம் விசேடியம், இவ் விசேடணத்தோடுங் கூடிய விசேடியத்தின் அபாவமுடைமை பக்ஷத்தன்மை. விசேடணுபாவத்தாலான விசிட்டாபாவம், விசேடியா பாவத்தாலான விசிட்டாபாவம், உபயாபாவத்தாலான விசிட்டாபாவம் என்னும் நியாயத்தினால் சாத்திய பாவஞானமுள்ள இடத்தில் துணிய வேண்டுமென்ற இச்சை யுள்ள போது விசேடண மில்லை, சாத்திய பாவஞானமாகிய விசேடிய மிருப்பினும் விசேடணுபாவத்தாலான விசிட்டாபாவ முளது. மலையில் வன்னியை யனுமிக்கும்போது துணிய வேண்டுமென்ற இச்சை இல்லாமையாகிய விசேடண மிருந்தும் சாத்தியபாவ ஞானமாகிய விசேடிய மில்லை; ஆகையால் விசேடியா பாவத்தாலான விசிட்டாபாவ முளது. இவ்விரண்டிடத்தும் பக்கத்தன்மை யிருத்தலினால் அனுமிதி நிகழுமென்க. யாண்டு, துணிய வேண்டுமென்னும் இச்சை இன்மையாகிய விசேடணமும் சாத்திய பாவ ஞானமாகிய விசேடியமும் இருக்குமோ, ஆண்டு விசிட்டாபாவ மின்மையால் அனுமிதி நிகழாதென வுணர்க.

வதுபோல் துணிய வேண்டுமென்ற இச்சையின் அபாவத்தோடுங்கூடின சாத்திய பாவ ஞானத்தின் அபாவமும் அனுமிதிக்குக்காரணமாம்.

பராமரிசம் வியாப்தியை விசேடணமாக வுடைய பக்கத ருமத் தன்மையின் ஞானம். அது (பராமரிசம்) ‘வன்னிவியாப் பிய தூமமுடையது இப்பருவதம்’ என்னும் ஞானம். அதனா லுண்டான ‘பருவதம் வன்னியுடையது’ என்னும் ஞானம் அனுமிதி.

வியாப்தி எ - து பராமரிசத்தி னிலக்கணங்கூறுகின்றது. வியாப் தியை விடயப்படுத்தும் பக்க தருமத்தன்மையின் ஞானம் எதுவோ, அது பராமரிச மென்பது பொருள். அது எ - து பராமரிசத்தை விளக் கிக் காட்டுகின்றது. அதனாலுண்டான எ - து அனுமிதி ஞானத்தை விளக்கிக் காட்டுவது. (அதாவது) பராமரிச (ஆராய்ச்சி) த்தா லுண்டா னது என்பது பொருள்

வியாப்தி யாண்டுத் தூமம் ஆண்டு வன்னியென உட னிகழ்ச்சி நியமம்.

யாண்டு எ - து வியாப்தியி னிலக்கணங் கூறுகின்றது. ‘யாண்டுத் தூமம் ஆண்டுவன்னி’ எ - து வியாப்தியின் (சொரூப) விளக்கம். ‘உடனிகழ்ச்சியினது நியமம்’ என்பது இலக்கணம். உடனிகழ்ச்சி யாவது சாமானாதி கரணியம் (ஒருநிலைக்களமுடையதாதல), அதனது நியமம் ஏதுவின் சமான அதிகரணத்தி லிருப்பதாகிய அத்தியந்தா பாவத்திற்குப் பிரதியோகி யாகாத சாத்தியத்தின் சமான அதிகரணத்தி லிருத்தல் என்பதாம். அதுவே வியாப்தி யென்பது பொருள்.

பக்கதருமத்தன்மை வியாப்யம் (தூமம்) பருவதமுதலிய வற்றில் இருத்தல்.

வியாப்யம் எ - து பக்க தருமத் தன்மையின் சொரூபத்தைக் கூறுகின்றது.

இவ் வனுமானம் இரண்டுவிதம்; சுவார்த்தம் (தன்பொ ருட்டு), பரார்த்தம் (பிறர்பொருட்டு) என்று. அவற்றுள் சுவார்த்தம் தனது அனுமிதி ஞானத்திற் கேது, அஃதெங்ஙன

ணமெனின் :—தானே அடிக்கடி காண்டலினால் 'யாண்டுத் தூமம் ஆண்டு வன்னி' என்று அடுக்களை முதலியவற்றில் வியாப்தியை யுணர்ந்து பருவத சமீபம் போனவனாய் அதி லுள்ள வன்னியின் சந்தேகங் கொண்டானாகப் பின்னர் பருவ தத்தில் தூமத்தைக் கண்டு வியாப்தியை நினைக்கின்றான் 'யாண்டுத் தூமம் ஆண்டுவன்னி' என்று; அதன் பின்னர் 'வன்னியின் வியாப்பியமான தூமமுடையது இப்பருவதம்' என்று ஞானமுண்டாகின்றது. இதுவே (திருதீய) லிங்க பராமரிசம் எனப்படுகின்றது. அதனால் 'இப்பருவதம் வன்னியு டையது' என்று அனுமிதி ஞான முண்டாகின்றது. அத் தகைய இவ் வனுமானம் சுவார்த்தானுமான மெனப்படும்.

இவ் வனுமானம் எ - து அனுமானத்தைப் பகுக்கின்றது. சுவார்த் தம் என்பது முதலியவற்றால் அதற் கிருவிதத் தன்மை அறிவிக்கப் படுகின்றது. அவற்றுள் என்பது இரண்டனுள் எனப்பொருள். தானே அடிக்கடி எ - து சுவார்த்தானுமிதியைக் காட்டுகின்றது. அற்றேல், பிருதிவித்தன்மை இரும்பாற் பிளத்தற்றன்மை முதலியவற்றில் நூற் றுக் கணக்காய் உடனிகழ்ச்சி காணப்படினும் மணி (வயிரம்) முதலிய வற்றில் வியபிசாரம் (பிறழ்ச்சி) காணப்படுவதால், அடிக்கடி காணப் படுவதால் எப்படி வியாப்தியைக் கவர்வது எனின்; அற்றன்று, வியபி சார ஞான மின்மையோடுங் கூடின உடனிகழ்ச்சி ஞானமே வியாபதி யைக் கவர்வதாதலினால்.

வியபிசார ஞானம் இரண்டுவிதம்; நிச்சயமும், சந்தேகமும் என்று. அதன் (சந்தேக வியபிசாரம்) நீக்கம் ஓரோவிடத்தில் (சந்தேக காரண மான இரண்டு கோடிகளை விடயஞ்செய்யும ஸ்மிருதி ஞானாபாவத்தால்) இயல்பானும், ஓரோவிடத்துத் தருக்கத்தானும் பெறப்படும். தூமவன் னிகளுக்கு வியாப்தியைக் கவருங்கால் காரிய காரணத் தன்மைக்குக் கெடுதிவரும் என்னும் இலக்கணமுடைய தருக்கம் வியபிசார சந் தேகத்தை நீக்குவது. அற்றேல், (உலகத்துள்ள) சகல வன்னி தூமங் களும் சமீபத்திராமையால் அவற்றின் வியாப்தியைக் கவாதல் எங்ஙன முண்டா மெனின்; அற்றன்று, வன்னித்தன்மை தூமத்தன்மை வடிவ

(அலௌகிக) * சாமானிய லக்ஷண பிரத்தியாசத்தியினால் சகல வன்னி தூமங்களின் (பிரத்தியக்ஷ) ஞானம் சம்பவிக்கின்ற படியால். அதனா லென்பது லிங்கபராமரிசத்தா லென்பது பொருள்.

தானே தூமத்தால் வன்னியை அனுமானித்துப் பிறருணரும் பொருட்டுக் கூறப்படும் ஐந்தவயவத்தோடுங் கூடின வாக்கியம் பரார்த்தானுமானம்; அது பருவதம் வன்னியுடைத்து 1, தூம முடைமையால 2, எது வெது தூம முடைத்தோ அது வது வன்னி யுடைத்து அடுக்களை போல 3, இதுவும் அங்ஙனம் 4, ஆகையா லிங்ஙனம் 5 எனவரும். சொல்லப்பட்ட இந்த லிங்கத்தினால் அன்னியனும் வன்னியை அறிகின்றான். பிரதிக்ஞை, ஏது, உதாரணம், உபநயம், நிகமனம் என ஐந்தவயவங்கள்: பருவதம் வன்னியுடைத்தென்பது பிரதிக்ஞை; தூம முடைமையால என்பது ஏது; எது வெது தூம முடைத்தோ அது வது வன்னியுடைத்து அடுக்களைபோல என்பது உதாரணம்; இதுவும் அங்ஙனம் என்பது உபநயம்; ஆகையால் இங்ஙனம் என்பது நிகமனம்.

தானே எ - து பரார்த்தானுமானங் கூறுகின்றது. அது எ - து ஐந்தவயவத் தோடுங் கூடிய வாக்கியத்திற்கு உதாரணங் கூறுகின்றது. பிரதிக்ஞை எ - து அவயவங்களின் வடிவத்தைக் கூறுகின்றது பருவதம் வன்னியுடைத்து எ - து உதாரணமாகக் கூறப்பட்ட வாக்கியங்களில் பிரதிக்ஞை (தந்துணிபுரைத்தல்) முதலியவற்றின் வேறுபாட்டைக் கூறுகின்றது. சாத்திய முடையதாகப் பக்கத்தைக் கூறும் வாக்கியம் பிரதிக்ஞை, ஐந்தாம் வேற்றுமையை அந்தத்திலுடையதாக லிங்கத்தைக் கூறும் வாக்கியம் ஏது, † வியாப்தியைக் கூறும் வாக்கியம்

* அடுக்களையிலுள்ள புகையை உணரும்போது புகைத் தன்மையாகிய சாதிசம்பந்தம் சகல புகைகளிலு மிருப்பதனால் சகல புகைகளின் ஞான முண்டாகின்ற தென்பது அலௌகிக சாமானிய லக்ஷண பிரத்தியா சத்தியாம். சாமானியம் - சாதி. பிரத்தியாசத்தி - சம்பந்தம்.

† அடுக்களை தூமமுடைத் தாவதால் வன்னியுடையதேயாம் என்னும் வாக்கியம்.

உதாரணம், * வியாப்தியை விசேடணமாக வுடைய லிங்கத்தைக் கூறும் வாக்கியம் உபநயம், + ஏது சாத்தியங்களை யுடையதாகப் பக்கத்தைக் கூறும் வாக்கியம் நிகமனம். பக்கத்தின் ஞானம் பிரதிக்ஞையின் பிரயோசனம், இலிங்கத்தின் ஞானம் ஏதுவின் பிரயோசனம், வியாப்தியின் ஞானம் உதாரணத்தின் பிரயோசனம், பக்கதருமத் தன்மையின் ஞானம் உபநயத்தின் பிரயோசனம், (பொருள்) பாதிக்கப் படாததன்மை முதலியன நிகமனத்தின் பிரயோசனம்.

சுவார்த்தானுமிதி, பரார்த்தானுமிதி என்னு மிரண்டிற்கும் இலிங்க பராமரிசமே காரணம்; ஆகையால் இலிங்க பராமரிசம் அனுமான மெனப்பட்டது.

இலிங்க பராமரிசம் எ - து அனுமிதியின் காரணங் கூறுகின்றது. அற்றேல், வியாப்தியின் ஸ்மிருதி பக்கதருமத்தன்மையின் ஞானம் என்னுமிவ் விரண்டானுமே அனுமிதியுண்டாகும்போது விசிட்ட (வன்னி வியாப்பிய தூமமுடையது இப்பருவதம் என்ற) பராமரிசத்தை எதன் பொருட்டு அங்கீகரிக்க வேண்டுமெனின்; அற்றன்று, 'வன்னி வியாபபிய தூமமுடையது இது' என்ற சத்த பராமரிச தலத்தில் (பரார்த்தானுமானம்) பராமரிசம் அவசியமாக வேண்டியதாகையால்; இலாகவமாக எங்கும் பராமரிசமே காரணமாக இருத்தலால். § இலிங்கம் காரணமன்று; சென்றது வருவது முதலிய (தூமங்களில்) வற்றில் பிறழ்தலினால். 'வியாபாரமுடைய காரணம் கரணம்' என்னும் மதத்தில் பராமரிசவழியாக வியாபதிஞானம் கரணம். அதனிற் றேன்றி அத

---

* இப்பருவதமும் அடுக்களை போன்று வன்னியின் வியாப்தியை யுடைய தூமத்தை யுடையதாம். என்னும் வாக்கியம்.

+ வன்னியின் வியாப்தியை யுடைய தூமத்தை யுடையதாவதால் இப்பருவதமும் அடுக்களை போன்று வன்னியுடையதேயாம் என்னும் வாக்கியம்.

§ தூமம் படிந்த இடத்தில் சென்ற தூமத்தால் சென்ற வன்னியையும், இனித் தொடங்கும் யாகசாலையில் வருந் தூமத்தால் வரும் வன்னியையும் துணியும்போது வர்த்தமான (நிகழ்கால) தூமமில்லை; ஆதலின் தூம ஞானமே காரண மாகின்ற தென்றபடி.

னிற் றோன்றுவதைத் தோற்றுவிப்பது * வியாபாரம். ஆகையால் எ - து அனுமானத்தை முடிக்கின்றது.

இலிங்கம் மூன்றுவிதம்; அந்நுவய வியதிரேகி, கேவ லாந்நுவயி, கேவலவியதிரேகி என்று.

இலிங்கம் எ - து இலிங்கத்தைப் பகுக்கின்றது.

அந்நுவய வியதிரேகி அந்நுவயத்தானும் வியதிரேகத் தானும் வியாப்தியுடையது. அது வன்னியைச் சாதிக்கும்போது தூமமுடைமை; யாண்டுத் தூமம் ஆண்டு வன்னி அடுக்களைபோன்று என அந்நுவய வியாப்தி; யாண்டு வன்னி யில்லை ஆண்டுத் தூமமில்லை தடாகம் போன்று என வியதி ரேக வியாப்தி.

அந்நுவயத்தானும் எ-து அந்நுவய வியதிரேக முடையத னிலக்கணங் கூறுகின்றது. ஏது சாத்தியங்களின் வியாப்தி அந்நுவய வியாப்தி, அவற்றின் அபாவங்களின் வியாப்தி வியதிரேக வியாப்தி.

கேவலாந்நுவயி அந்நுவயத்தில் மாத்திரம் வியாப்தி யுடையது. அது கடம் அபிதேயம், பிரமேயத் தன்மையால், படம் போல எனவரும். ஈண்டு, பிரமேயத்தன்மை அபிதேயத் தன்மைகளுக்கு வியதிரேக வியாப்தி யில்லை, எலலாம் பிரமே யத்தன்மையையும் அபிதேயத்தன்மையையும் உடையதாதலி

அந்நுவயத்தில் மாத்திரம் எ - து கேவலாந்நுவயத்தி னிலக்க ணங் கூறுகின்றது கேவலாந்நுவயி யாகிய சாத்தியத்தையுடைய இலிங்கம் கேவலாந்நுவயி; அத்தியந்தாபாவத்திற்குப் பிரதியோகி யாகாமை கேவலாந்நுவயி; கடம் அபிதேயம், பிரமேயத் தன்மையால் என்பது கேவலாந்நுவயியை யுடையதற்கு உதாரணங் கூறுகின்றது. ஈசுவரானது பிரமை ஞானத்திற்கு விடயமாந் தன்மையும் எல்லாம் என்

* கபாலக் கிரியை கபாலத்திற் றோன்றிக் கபாலத்தா லாகும் கடத்தைத் தோற்றுவிக்கின்றது; ஆகையால், கபாலக் கிரியை வியா பார மாயிற்று என்பதாம்.

னும் பதத்தால் அபிதேய (பெயரிட்டு வழங்கற்பாலது)த் தன்மையும் யாண்டு மிருத்தலினல் (அவற்றிற்கு) வியதிரேகா பாவமாம்.

கேவல வியதிரேகி வியதிரேகத்தில மாத்திரம வ்யாபது யுடையது. அது பிருதிவி பிறவற்றினின்றும் பேதமுடையது, கந்தமுடைமையால், எது பிறவற்றினின்றும் பேத முடையதன்றோ அது கந்தமுடையதன்று அப்புபோல, இது வும் அங்ஙனமன்று, ஆதலின் இங்ஙனமன்று எனவரும். ஈண்டு யாது கந்தமுடையதோ அது பிறவற்றினின்றும் பேத முடையது என்று அந்றுவய திருஷ்டாந்த மில்லை; பிருதிவி முழுவதும் பக்கமாதலின்.

வியதிரேக எ - து கேவல வியதிரேகியி னிலக்கணங் கூறுகின் றது. அது எ - து கேவல வியதிரேகிக் குதாரணங் கூறுகின்றது.

அற்றேல், பிறவற்றினின்றும் பேதம் முன்னர் உணரப்பட்டதா, இன்றா ? முன்னையதேல் யாண்டு உணரப்பட்டதோ ஆண்டு ஏது விருப் பின் அந்றுவய முடைத்தாதல் கூடும், இன்றாயின் அசாதாரண (பக்கத் தில் மாத்திர மிருக்கும் ஏதுவையுடையது) முடைமையாம். இரண் டாவதேல் சாத்திய ஞான மில்லாதபடியால் எவ்வாறு அத (பேதம்) னல் விசேடிக்கப்பட்டதன் அனுமிதியாம், விசேடண ஞானமில்லாத போது விசிட்டஞான முண்டாகாதபடியால். பிரதியோகி ஞானமில் லாமையால் வியதிரேக வியாப்திஞானமு முண்டாகாது எனின் ; அற் றன்று, அப்பு முதலிய பதின்மூன்றின் அந்நியோன்னியாபாவம் பதின் மூன்றனிடத்துத் தனித்தனி உணரப்பட்டுள்ளவன்றோ ; அவைகளின் றொகுதி பிருதிவியில் சாதிக்கப்படுகின்றது. பதின்மூன்றன் தன்மை யால் அவச்சின்ன மாக்கப்பட்ட சாத்தியம் ஓரிடத்திராதபடியால் அந்று வய முடையது மன்று, அசாதாரண (சிறப்பிலே காந்திகம்) முடையது மன்று. தனித்தனி யிடத்து உணரப்பட் டிருப்பதால் * சாத்திய விசிட்ட அனுமிதியும், சாத்தியா பாவத்தினும் வியாபகமான அபாவத்

* பிருதிவி நீங்கலாக மற்ற திரவியம் எட்டும் அபாவம் நீங்கலாக மற்ற பதார்த்தம் ஐந்தும் ஆகிய பதின்மூன்றன் பேதத்தோடு கூடிய தன் அனுமிதியும் என்பது.

திற்குப் பிரதியோகியாம் என்பது வியதிரேக வியாப்தியை நிரூபிப்பதும் ஆகலான் ' எது பிறவற்றினின்றும் ' எனப்பட்டது

பக்கம் ஐயப்பட்டுத் துணியும் பொருளுக்கிடம்; அஃதெங்ஙனம், தூமவடிவ ஏதுவில் பருவதம் பக்கம். சபக்கம் நிச்சயிக்கப்பட்ட சாதத்தியமுடையது; அஃதெங்ஙனம், ஆண்டே (அவ்வேது) அடுக்களை. விபக்கம் நிச்சயிக்கப்பட்ட சாத்தியத்தின் அபாவமுடையது; அஃதெங்ஙனம், ஆண்டே தடாகம்.

ஐயப்பட்டு எ - து பக்கத்தி னிலக்கணங் கூறுகின்றது. அற்றேல், சிரவணத்தின் பின்னருண்டாம் மனனத்தில் அவ்வியாப்தியாம், ஆண்டு வேதவாக்கியங்களால் ஆன்மா நிச்சயிக்கப் பட்டதாகையால், ஐயமின்மையின், மேலும் வன்னி பிரத்தியக்ஷமா யிருக்கும போதும் யாண்டு இச்சையினு லனுமிதி யுண்டாகின்றதோ ஆண்டும் அவ்வியாப்தியாம் எனின்; அற்றன்று, சொல்லப்பட்ட பக்கத்தன்மை யுடைமையே பக்கத்திற் கிலக்கணமாகலின் நிச்சயிக்கப்பட்ட எ - து சபக்கத்தி னிலக்கணங் கூறுகின்றது. நிச்சயிக்கப்பட்ட எ - து விபக்கத்தி னிலக்கணங் கூறுகின்றது.

இனி ஏதுவாபாசம (ஏதுப்போலி) சவ்வியபிசாரம, விருத்தம், சத்பிரதிபக்கம், அசித்தம், பாதிதம் என ஐந்து விதம். சவ்வியபிசார மென்பது அநைகாந்திக (ஒருநிலைக்களத்தில் முடிந்திராதது) ம. அது மூன்றுவிதம்; சாதாரணம் - பொது, அசாதாரணம் - சிறப்பு, அனுபசம்மாரி - முடிவுபெறாமை என்னும் பேதத்தினுல்.

ஏதுவாபாசம் அனுமிதியைப் பிரதிபந்திக்கும் யதார்த்த ஞானத்திற்கு விடயமாவது சவ்வியபிசாரம் எ - து இங்ஙனஞ் சத்து ஏதுக்களை நிரூபித்து அசத்து ஏதுக்களை நிரூபிக்கப் பகுக்கின்றது அது மூன்று விதம் எ - து சவ்வியபிசாரத்தைப் பகுக்கின்றது.

அவற்றுள் சாதாரணம் அநைகாந்திகம் சாத்தியமின்றிய இடத்திலிருப்பது. அது பருவதம் வன்னியுடைத்து, பிரமேயத் தன்மையால் என்பது, பிரமேயத்தன்மை வன்னியின் அபாவமுடைய தடாகத்தி லிருப்பதனு லென்க.

**சாத்திய எ-து சாதாரணத்தி னிலக்கணங் கூறுகின்றது. அது பருவதம் எ-து அதற்குதாரணங் கூறுகின்றது.**

அசாதாரணம எல்லா சபக்க விபக்கங்களிலு மில்லாமல் பக்கத்தில் மாத்திர மிருப்பது. அது சத்தம் அநித்தியம், சத்தத்தன்மை யுடைமையால் என்பது.. சத்தத்தன்மையோ எல்லா அநித்திய பதார்த்தங்களிலும் நித்திய பதார்த்தங்களிலு மில்லாமல சத்தத்தில மாத்திர மிருக்கினறது.

**எல்லா சபக்க எ-து அசாதாரணத்தி னிலக்கணங் கூறுகின்றது**

அநுபசம்மாரி அந்நுவயத்திலும வியதிரேகத்திலும் திருஷ்டாந்த மில்லாதது. அது எல்லாம் அநித்தியம், பிரமேயத் தன்மையால எனபது. ஏண்டு எல்லாமும பிரமேயமாதலின் திருஷ்டாந்த மிலலை.

**அந்நுவயத்திலும் எ-து அநுபசம்மாரியினிலக்கணங் கூறுகின்றது.**

(இனி) விருத்தம சாத்தியாபாவ முடையதில் வியாபித்திருக்கும ஏது. அது சத்தம நித்தியம், காரியத்தன்மையால் எனபது. காரியத்தன்மையோ நித்திய மலலாத அநித்தியத்தில் வியாபித திருப்பது.

**சாத்தியாபாவம் எ-து விருத்தத்தி னிலக்கணங் கூறுகின்றது.**

சத்பிரதிபக்கம் சாத்தியா பாவத்தைச் சாதிக்கும் வேறோர் ஏதுவினை யுடையது. அது சத்தம் நித்தியம், செவியாலுணரப்படுதலின, சத்தத் தனமைபோல ; சத்தம் அநித்தியம், காரியத்தன்மையால், கடம்போல என்பது.

**சாத்தியாபாவ எ-து சத்பிரதிபக்கத்தி னிலக்கணங் கூறுகின்றது.**

அசித்தம மூன்று விதம் ; ஆசிரய (சார்பு) அசித்தம், சொரூபாசித்தம, வியாப்யத்தன்மை அசித்தம் என்று.

**அசித்தம் எ-து அசித்தத்தைப் பகுக்கின்றது.**

அவற்றுள ஆசிரயாசித்தம் ஆகாயத்தாமரை மணமுடைத்து, தாமரைத் தன்மையை யுடைமையால், தடாகத்

தாமரை போல என்பது. ஈண்டு ஆகாயத் தாமரை (தாமரைத் தன்மைக்கு) ஆசிரயம், அதுவே இல்லை.

ஆகாயத் தாமரை எ-து ஆசிரயாசித்தத்திற் குதாரணங் கூறுகின்

சொரூபாசித்தம் சத்தம் நித்தியம், கண்ணுக்குப் புலனாதலின், உருவம்போல என்பது. ஈண்டுக் கண்ணுக்குப் புலனாதல் பக்கத்திலில்லை; சத்தம் செவிக்குப் புலனாதலின்.

சத்தம் எ-து சொரூபாசித்தத்திற் குதாரணங் கூறுகின்றது

வியாப்பியத் தன்மை அசித்தம் சோபாதிக (உபாதியுடையது) ஏது. உபாதி சாத்தியத்தில் வியாபித்து ஏதுவில வியாபியாதது. * சாத்திய மிருக்கும் சமான அதிகரணத்துள்ள அத்தியந்தாபாவத்திற்குப் பிரதியோகி யாகாமை சாத்தியத்தில் வியாபித்தல். ஏதுவிருக்கும் சமான அதிகரணத்துள்ள அத்தியந்தா பாவத்திற்குப் பிரதியோகி யாதல் ஏதுவில் வியாபியாமை; அது 'பருவதம் தூமமுடைத்து, வன்னியுடைமையால்' எனுமிடத்து ஈரவிறகின் சையோகம் உபாதி என்பது. அஃதெங்ஙனமெனின 'யாண்டுத் தூமமோ ஆண்டு ஈரவிறகின் சையோகம்' என்று சாத்தியத்தில் வியாபித்தலும், 'யாண்டு வன்னியோ ஆண்டு ஈரவிறகின சையோக மின்று காய்ச்சிய இரும்புருண்டையில் ஈரவிறகின் சையோக மின்மையால்' என்று ஏதுவில் வியாபியாமையுமாம். இங்ஙனம் சாத்தியத்தில் வியாபகமாய் சாதனத்தில் அவ்வியாபகமாயிருத்தலினால் ஈரவிறகின் சையோகம் உபாதி. வன்னியுடைமை (ஏது) சோபாதிக மாகையால் வியாப்பியத் தன்மை அசித்தமாம்.

சோபாதிகம் எ-து வியாப்பியத் தன்மை அசித்தத்தினிலக்கணங் ன்றது. சாத்தியத்தில் எ-து உபாதியினிலக்கணங் கூறுகின்

---

* சாத்தியமிருக்கும் சமான அதிகரணம் என்பது துணிபொருளின் ஒருநிலைக்களம் என்பது பொருள்.

றது. உபாதி நான்கு விதம், சாத்திய முழுவதும் வியாபிப்பதும், பக்கதருமத்தால் அவச்சின்னமான சாத்தியத்தில் வியாபிப்பதும், சாதன வச்சின்னமான சாத்தியத்தில் வியாபிப்பதும், உதாசீன (யாதானுமோர்) தருமத்தால் அவச்சின்னமான சாத்தியத்தில் வியாபிப்பதும் என்று. முதலது ஈரவிறகின் சையோகம். இரண்டாவது 'வாயு பிரத்தியக்ஷம், பிரத்தியக்ஷ பரிசத்திற்கு ஆசிரயமாவதால்' என்னுமிடத்தில் வெளித்திரவியதன்மையால் அவச்சின்னமான பிரத்தியக்ஷத்தில் வியாபிப்பது உத்பூத உருவமுடைமை எனவரும். மூன்றாவது 'துவம்ச (அழிவுபாடு) அபாவம் நாசமுடைத்து, உத்பத்தியுடைமையால்' என்னுமிடத்தில் உத்பத்தி யுடைமையால் அவச்சின்னமான அநித்திய முடையதில் வியாபிப்பது பாவத்தன்மை எனவரும். நான்காவதெனிலோ 'பிராக (முன்) பாவம் நாசமுடைத்து, பிரமேயத் தன்மையால்' என்னுமிடத்து உத்பத்தியுடைமையால அவச்சின்னமான அநித்தியத்தில் வியாபிப்பது பாவத்தன்மை என வருதல் காண்க.

பாதிதம் தனது சாத்தியத்தி னபாவம வேறு பிரமாணத்தால் நிச்சயிக்கப்படுவது. அது வன்னி சூடில்லாதது, திரவியமாதலின எனபது. ஈண்டுச் சூடின்மை சாத்தியம், அதனது அபாவமான சூடுடைமை துவக்கிந்திரியத்தால் பிரத்தியக்ஷமாக அறியப்படுகின்றது; எனபது பாதிதமாம். அனுமானங் கூறப்பட்டது.

தனது எ - து பாதிதத்தி னிலக்கணங் கூறுகின்றது ஈண்டு பாதிதம் கொள்ளவேண்டியதன் அபாவத்தை நிச்சயஞ் செய்கின்றமையானும், சத்பிரதிபக்கம் விரோதி ஞானத்திற்குச் சாமக்கிரியாக இருத்தலானும் நேரே அனுமிதியைப் பிரதிபந்திப்பனவாம். மற்றவை பராமரிசத்தைப் பிரதிபந்திப்பன : அவற்றுள்ளும், சாதாரணம் பிறழ்ச்சியில்லாமை அல்லாமையானும், விருத்தம் சமானாதிகரணத்தை யுடையதல்லாமையானும், வியாப்பியத் தன்மை அசித்தம் விசேடணதோடுங் கூடிய வியாப்தியின் அபாவமுடைமையானும், அசாதாரணம் அனுபசம்மாரி யாகிய இரண்டும் வியாப்தியின் சந்தேகத்தை யுண்டாக்குகின்றபடியானும், வியாப்தி ஞானத்தைப் பிரதிபந்திக்கின்றன. ஆசிரயாசித்தம் சொருபாசித்தம் என்னு மிவ்விரண்டும் பக்க தருமத்தன்மை

ஞானத்தைப் பிரதிபந்திப்பனவாம். உபாதி எனின் பிறழ்ச்சி ஞான வழியாக வியாப்தி ஞானத்தைத் தடுப்பதாம். சித்தசாதனமோ (துணிந்த தனைத் துணிவிப்பது) பக்கத்தன்மையை அழித்தலினால் ஆசிரயாசித் தத்துள் அடங்கு மென்பர் பிராசீனர். நிக்கிரக (தோலவி) தானத்துள் அடங்கு மென்பர் நவீனர்.

இங்ஙனம் தருக்க தீபிகையில் அனுமானம் முடிந்தது.

---

## உவமானப் பிரமாணம்.

உவமானம் உவமிதிக்குக் கரணம். உவமிதி பெயருக்கும் பொருளுக்கும் உள்ள சம்பந்தத்தின் ஞானம். அதற்குக் கரணம் சாதிருசிய ஞானம்; அஃதெங்ஙன மெனின் ஒருவன் கவயம் (காட்டுப்பசு) எனனும் சத்தத்தின் பொருளை அறியாதவனாய் ஒரு வனவாசியினிடம் 'கோவிற்குச் சமான மானது கவயம' என்று கேட்டு வனத்திற் சென்றவனாய் (வனவாசியால் கூறிய) வாக்கியத்தின பொருளை நினைப்பவனாய் கோவிற்குச் சமானமான பிண்டத்தைக் காண்கின்றான். அதன் பின்னர் 'இது கவய சத்தத்தின் வாச்சியம' என்று உவமிதி யுண்டாகின்றது.

இங்ஙனம் உவமானம் உரைக்கப்பட்டது.

உவமிதி எ-து உவமானப் பிரமாணத்தி னிலக்கணங் கூறுகின்றது. பெயருக்கும் எ - து உவமிதி யிலக்கணங் கூறுகின்றது.

---

## சத்தப் பிரமாணம்.

சத்தப் பிரமாணம் ஆப்தன் வாக்கியம். ஆப்தனோ உண்மை யுரைப்போன். வாக்கியம் பதங்களின் கூட்டம்; அது 'தண்டத்தால் வெள்ளைப் பசுவைக் கொண்டுவா' என்பது.

ஆப்தவாக்கியம் எ - து சத்தப் பிரமாணத்தி னிலக்கணங் கூறுகின்றது. வாக்கியம் எ - து வாக்கியத்தி னிலக்கணங் கூறுகின்றது.

பதம் சக்தி (ஆற்றல்) யை யுடையது. சக்தி இப்பதத்தி

யம் இப்பொருள் அறியத்தக்கது என்று ஈசுவரனுடைய சங்கேத (குறிப்பு) மேயாம்.

சக்தியை எ - று பதத்தி னிலக்கணங் கூறுகின்றது. பொருள் களின் நினைவிற் கனுகூலமான பதத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந் தம் சக்தியாம். அதுவும் வேறு பதார்த்தமென்பர் மீமாஞ்சகர், இப் பதத்தினின்றும் எ - று அதனைக் கண்டித்துக் கூறுகின்றது ஆதன் பூதன் என்பவற்றுக்குப்போல கடமுதலானவற்றுக்கும் சங்கேதமே சக்தியாம் ; வேறுபதார்த்த மன்றென்பது பொருள்.

கோமுதலிய சத்தங்களுக்குச் சாதியின்கண்ணேயே சக்தியாம், விசேடணமாக முதலில் சாதியே கொள்ளப்படுதலால், வியக்தி (பிண் டம்) யினடைவு ஆக்ஷேப (அருத்தாபத்தி) த்தா லுண்டாகின்றது. என்று சிலர் கூறுகின்றனர், அது பொருந்தாது ; ஆவைக்கொண் டுவா என்பது முதலியவற்றில் பெரியோர் வழக்கத்தால் யாண்டும் கொண்டு வருதல் முதலியன சாதிவிசிட்ட வியக்தியின்கண்ணே பொ ருந்துகின்றபடியால், சாதியையுடைய வியக்தியின்கண்ணே சக்தி கற் பிக்கப்படுவதால்

சக்தியை யுணர்தலும் பெரியோர் வழக்கா லுண்டாகின்றது; அஃ தெங்ஙனமெனின், சொற்பொருளைத் தெரிந்துகொள்ள இச்சையை யுடைய பாலன் ' பசுவைக் கொண்டுவா ' என்று பெரியோனின் வாக்கி யத்தைக் கேட்டபின்னர் இடைப்பட்ட பெரியோனின் முயற்சியை அறிந்து, பசுவைக கொண்டு வருதலையும் அறிந்து இடைப்பட்ட பெரி யோனின் முயற்சியை யுண்டாக்கும் ஞானம் அந்நுவய வியதிரேகங் களினுல் வாக்கியத்தினு லுண்டாகின்றதென நிச்சயித்து ' குதிரையைக் கொண்டுவா ' ' பசுவைக் கட்டு ' என்னும் வேறு வாக்கியத்தில் கொள் ளுதல் தள்ளுதல்களால் பசு என்னும் பதத்திற்குப் பசுத்தன்மை விசிட்ட (கூடின) பிண்டத்தில் சக்தி, குதிரை என்னும் பதத்திற்கு குதிரைத் தன்மை விசிட்ட பிண்டத்தில் சக்தி என உணர்ந்து கொள்ளுகின்றான்.

அற்றேல், யாண்டும் வியவகார (வழக்கம்) ம் * காரியபரமா யிருத்த லின் காரிய பரமான வாக்கியத்திலேயே சக்தியின் ஞான முண்டாகும்,

---

* முயற்சியாற் சாதிக்கத்தக்க தொழிலின் கண் தாத்பரிய முடை யதா யிருப்பதே காரிய பரமாவது.

சித்தித்த அர்த்தத்தைப் போதிக்கும் வாக்கியத்தில் உண்டாகாதெனின்; அற்றன்று, 'காஞ்சியின்கண் முப்புவன திலகனென அரசனிருந்தான்' என்பது முதலிய சித்தித்த அர்த்தத்தைப் போதிக்கும் வாக்கியத்திலும் வியவகார (வாக்கியோச்சாரண வடிவம்) மிருத்தலினாலும்; 'மலர்ந்த தாமரையில் வண்டு தேனைப பருகுகின்றது' என்பது முதலியவற்றில் வெளிப்படையான பதத்தைச் சேர்த்து உச்சரிப்பதனால் சித்தித்த அர்த்தத்திலும் வண்டு முதலிய சத்தத்தின் சத்திஞானங் காணப்படுகின்ற படியாலும்.

இலக்கணையும் சத்தத்தின்கண்ணுள்ளது. சக்கிய சம்பந்தம் இலக்கணை. 'கங்கையி லிடைச்சேரி' என்னு மிடத்தில் கங்கை என்னும் பதத்திற்கு வாச்சியமான பிரவாகத்தின் சம்பந்தத்தினாலேயே கரையின் உணர்வு வருமாதலின் கரையிலுஞ் சக்தியைக் கற்பிக்கக்கூடாது. சையிந்தவ முதலிய பதங்களில் (அவற்றின் பொருளான) இலவணம் குதிரை முதலியவற்றிற்கு ஒன்றற்கொன்று சம்பந்த மின்மையால் அநேக சக்தி கற்பிக்கப்படுகின்றன.

இலக்கணை மூன்று விதம்; விட்ட விலக்கணை, விடாத விலக்கணை, விட்டு விடாத விலக்கணை என்று. யாண்டு வாச்சியார்த்தத்திற்கு அந்நுவயம் (கொண்டு கூட்டு) இல்லையோ ஆண்டு விட்ட விலக்கணை; அது 'மஞ்சங் கூப்பிடுகின்றது' என்பது. யாண்டு வாச்சியார்த்தத்திற்கு அந்நுவய மிருக்கின்றதோ ஆண்டு விடாத விலக்கணை; அது 'குடைக்காரர் செல்கின்றனர்' என்பது யாண்டு வாச்சியார்த்தத்தின் ஏகதேசத்தைத் தள்ளி ஏகதேசத்திற்கு அந்நுவய மிருக்கின்றதோ ஆண்டு விட்டு விடாத விலக்கணை; அது 'அது நீயா யிருக்கின்றாய்' என்பது. கௌணி விருத்தியும் இலக்கணையே, இலக்ஷிக்கப்படுகின்ற குணத்தின் சம்பந்த வடிவம்; அது 'அக்கினி மாணவகன்' என்பது.

வியஞ்சனா விருத்தி (குறிப்புப் பொருளின் சம்பந்தம்)யும் சத்தத்தின் சத்திமூலமா யுணரப்படுவதும், அர்த்தத்தின் சக்தி மூலமா யுணரப்படுவதும் என இரண்டுவிதம். அவற்றுள், * சத்தத்தின் சக்தி மூலமா யுணரப்படும் வியஞ்சனாவிருத்தி சக்திவிருத்தி இலக்கணாவிருத்திகளி லடங்

* சத்த சத்திமூலமான (பலபொருளுக்கிடமாகிய) வியஞ்சனாவிருத்தி

சத்திவிருத்தியில் அடங்கும்விதம்:— 'தூரத்திலுள்ள பூதரன் அழகன்' என்னுமிடத்தில் சமீபத்திலுள்ள அம்மலை காடு மூடாக இருப்பது போலவே சமீபத்திலுள்ள அரசனும் 'இராசசேவை மனிதர் கத்தி நுனியை நாவால் நக்குவராவர்' என்னும் நியாயப்படி பயத்திற்குக் காரண மாகின்ருன் என்னு மிப்பொருள் வியஞ்சன விருத்தியா லுண்டாகின்ற தென்பர் ஆலங்காரிகர்; அது பொருந்தாது, ஏனெனின், அது சத்தி விருத்தியினுலேயே உண்டாகின்றபடியால்; அஃதெங்ஙன மெனின் 'பூதரன்' என்னும் பதம் அழகுடைய மலையைச் சத்திவிருத்தியினுல் அறிவிப்பதுபோலவே கோபமுடைய அரசனையும் சத்திவிருத்தியினு லேயே அறிவிக்கின்றது. ஆகையால் கோபமுடைய அரசன் என்னும் பொருள்தோன்ற வியஞ்சனவிருத்தி வேண்டியதில்லை என்பதாம்.

இனி அது இலக்கணவிருத்தியில் அடங்கும்விதம்:— 'கங்கையி லிடைச்சேரி' என்னுமிடத்தில் சீதம் புனித முதலியவற்ருேடுங் கூடிய கரையின் ஞான முண்டாகின்றது; இச சீதம் புனித முதலியவற்றின் ஞானம் வியஞ்சன விருத்தியினு லுண்டாகும்; அஃதெங்ஙனமெனின், கரையி லிடைச்சேரி எனக் கூறினுலேயே கரையின் ஞானம் நேரே யுண்டாகும்போது அந்நுவயம் பொருந்தாமையு மில்லை அங்ஙனமிருக்க கரையை விடுத்து கங்கை என்னும் பதத்தைக் கொண்டபோதும் கரை யின் ஞானமாத்திர முண்டாகின்ற தென்று கொள்ளுதல் பொருத்த மில்லை; மற்ருே சீதம் புனித முதலியவையுங் கொள்ளப்படுகின்றன, அவை இலக்கண விருத்தியினுல் தோன்றலாமே எனின்; அற்றன்று, இலககணை செய்தற்குக் காரணம் அந்நுவயம் பொருந்தாமையாம். கரை யில் அந்நுவய முண்டானபோது அவ்வந்நுவயம் பொருந்தாமை யில்லை; ஆகையால், சீதம புனித முதலியவை இலக்கண விருத்தியா லுண்டா காமல் வியஞ்சன விருத்தியா லுண்டாகின்ற தென்பர். அது பொருந் தாது; ஏனெனின், இலக்கணைக்குக் கூறுவோன் தாத்பரியம் பொருந் தாமையே காரண மாகலின். அதனுல் ஈண்டுக் கங்கை என்னும் பதத் திற்குச் சீதம் புனிதம் முதலியவற்ருேடுங் கூடிய கரையே கூறுவோன் தாத்பரியமாம்; ஆகையால் கரையில் என்னும் பதத்திற்கும் சீதம் புனித முதலியவை சக்கியார்த்த மாகாமையால் அவை இலக்கண விருத் தியின் மகிமையினுலேயே கொள்ளப்படுகின்றன. ஆகையால் அவற் றிற்கு வியஞ்சன விருத்தி வேண்டியதில்லை என்பதாம்.

கும். † அர்த்தத்தின் சக்திமூலமா யுணரப்படும் வியஞ்சனவிருத்தி அனு மான முதலியவற்ருல் அந்நியதா சித்தம்.

(கூறுவோன்) தாத்பரியவுணர்வு (கருத்து) பொருந்தாமை இலக் கணைக்குப் பீசம் (மூலம்). அவ்வப் பொருளுணர்ச்சி (ஏனையோருக்கு) தோன்றவேண்டு மென்ற இச்சையினுல் உச்சரித்தல் வடிவ தாத்பரிய ஞானமும் வாக்கியார்த்த ஞானத்தில் ஏதுவாம், வெவவேறு பொரு ளுணர்ச்சியை யுண்டாக்குதலினுல். தாத்பரியத்தை அறிவிப்பது பிர கரணம் (சந்தர்ப்பம்) முதலியன என்க.

வாயிலே என்பது முதலியவற்றில் மூடு என்னும் பதம் அத்தியாகா ரம் (சொல்லெச்சம்) அற்றேல், சத்தம் அர்த்த ஞானத்தின் பொருட்டா யிருத்தலினுல், அர்த்த ஞானமின்றி சத்தத்தின் அத்தியாகாரம் பொருந்

† அர்த்தசத்தி மூலமான வியஞ்சனவிருத்தி அனுமான முதலிய வற்றில் அடங்கும விதம்:—' செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்று நின், நல்வரவு வாழ்வார்க்குரை, இ - ள். (தலைவி கூற்று) நீ என்னைப பிரி யாமை யுண்டாயின அதனை எனக்குச்சொல அஃதொழியப்பிரிந்துபோய் விரைந்து வருதல் சொல்லுவையாயின் அதனை அபபொழுது உயிர்வாழ் வார்க்குச்சொல் என்பதாம். 'நீ பிரியின் நான் உயிர் துறபபேன் ஆகலின நீ என்னைப்பிரியாதே' என்னு மிக்கருதது ஈண்டுள்ள பதஙகளின் (பூத ரன், கங்கை என்பவற்றிற்குப்போல) சத்தி விருத்தியினுலும் இலக கணு விருத்தியினுலு முண்டாகவில்லை, மற்ருே, இக்குறளில் வாழ் வாரக்குரை என்ற சொல்லின் நேரான அர்த்தத்தினின்றும் நீ செல்ல வேண்டாம் நான் உயிர் துறபபேன் என்ற பொருள் வியஞ்சன விருத் தியா லுண்டாகின்றது இதுவே அர்த்தசத்திமூலமான வியஞ்சன விருத் தியா லுண்டாகின்ற தென்பர். அது பொருந்தாது ; எனெனின், அனு மான முதலியவற்ருல் அந்நியதாசித்த (வேறு பிரகாரமாகக் கிடைப்பது) மாகலின். அவ்வனுமானம் வருமாறு:— இவள் பிரிந்து சென்ற காலத் தில் உயிர் துறப்பள், விலக்ஷணமான (இலக்கண வேறுபாடுடையது) வாக்கியங்களைக் கூறுதலால் என்பது. இவ்வர்த்த மூலமான வியஞ்சனு அனுமானத்தில் அடக்கப்பட்டபடியால் இது அனுமானத்தி னுகவில்லை என்பதாம் முதலிய சத்தத்தால ஆததாபததி முத லியவற்றையுங் கொள்க.

தாதாகையால் அர்த்தத்தின் அத்தியாகாரமே (பொருளெச்சம்) பொருத்தமெனின் ; அற்றன்று, பதவிசேடத்தா லுண்டான பதார்த்த ஞானமே சாத்த ஞானததிற்குக் காரண மாகையால். அங்ஙனங் கொள்ளாவிடில், கடஞ் செயப்படு பொருள், கொண்டுவருதல் (கருத்தாவின்) முயற்சி என்னுமிடத்தும் (கடத்தைக் கொணடுவந்தா னென்னும்) சாத்தஞானம் சம்பவிக்கும

பங்கஜ முதலிய பதஙகளில் யோக ரூடி (காரண இடுகுறி): அவயவ (இருபதம்) த்திலுள்ள சக்தி யோகம் (காரணம்), சமுதாய (பொது) த்திலுளள சக்தி ரூடி (இடுகுறி), நியதமாயத் தாமரையே யுணரவேண்டி சமுதாய சகதியும் வேண்டபபடுகின்றது, இன்றேல் குவளை முதலியவற்றையும் பஙகஜ மெனல் வேணடும்.

' இதரான்வித (ஏவபபடாத மற்றென்றனோடு கொண்டு கூட்டியது)த்தின் கண்ணே சகதி, எனபர் பிரபாகரரைச சேர்ந்தவாகள் 'அந்நுவயம் (கொண்டு கூட்டுதல்) வாக்கியார்த்தமாக விளஙகுகின்றபடியால் அந்நுவயாம்சத்திலும் சததியைக் கற்பிக்கவேண்டாம' என்று கௌதமரைச் சேர்நதார் கூறுவர்.

ஆகாங்க்ஷை (அவாய நிலை) யும், யோக்கியதை (தகுதி) யும, சந்நிதி (அணமை) யும வாக்கியார்த்த ஞானத்தில் காரணம்.

ஆகாங்க்ஷையும், யோக்கியதையும், சந்நிதியும் என்றது அவற்றின் ஞானமென்பது பொருள். இன்றேயின் * ஆகாங்க்ஷை முதலியவற்றின பிராநதியால்(மயககம்)சத்ததத்தா லுண்டான பிராந்தியுணர்வு தோன்றுது.

ஒருபதத்திற்கு வேறொருபத மின்மையினு லுண்டான, அந்நுவய முண்டாகாமை ஆகாங்க்ஷை. பொருள் பாதிக்கப் படாமை யோக்கியதை. பதங்களை விலம்ப (காலதாமதம்) மில்லாமல் உச்சரிப்பது சந்நிதி.

ஒருபத எ - து ஆகாங்க்ஷையி னிலக்கணங் கூறுகின்றது பொருள் எ - து யோக்கியதையி னிலக்கணங் கூறுகின்றது. பதங்களை எ - து

* ஆகாங்க்ஷை யில்லாத சத்தத்தில் ஆகாங்க்ஷை இருப்பதாகப் பிராந்தி யுண்டாய் சாத்தப் பிராந்தி யுண்டாகின்றது ; அது ஆகாங்க்ஷை முதலியவற்றின் ஞானத்தைக் கொள்ளாக்கால் உண்டாகக்கூடாது என்பது பொருள்.

சந்நிதியி னிலக்கணங் கூறுகின்றது. (பதத்தாலுண்டான) பதத்தின் அர்த்தஞானம் விலம்பமின்றித் தோன்றுதல் சந்நிதி. உச்சரித்தலோ அதற்குபயோகமாகக கூறபபட்டது.

ஆகாங்கைக்ஷ முதலியவை இல்லாத வாக்கியம அபபிர மாணம ; அது ' ஆ குதிரை ஆணமகன் யானை ' என்பது பிரமாண மன்று, ஆகாங்கைக்ஷ இனமையால். ' தீயாற் றெளிக குக ' எனபது பிரமாணமன்று, யோகியதை இன்மையால். தொடாந துச்சரிக்கப்படாத யாம யாமததிறகு ஒவ்வொன் ருக ' ஆவைக் கொண்டுவா ' என்பன முதலான பதங்கள் பிரமாணமனறு, சந்நிதி யின்மையால். எனவருமம.

ஆ குதிரை எ - து அதற் (ஆகாங்கைக்ஷ இன்மை) குதாரணம். கடஞ் செயப்படுபொருள் எனபதும் ஆகாங்கைக்ஷ இல்லாமைக் குதாரணமாக வறிக.

வாக்கியம இரண்டு விதம ; வைதிகமும், லௌகிகமும என்று. வைதிகம் இறைவன் வாய்மொழியாகலான் எல்லாம் பிரமாணமே. லௌகிகமோ ஆப்தனுற் சொலலப்பட்டது பிர மாணம ; ஏனையது பிரமாணமனறு. வாககியார்தத ஞானம் சாத்தஞானம. அதற்குக் கரணம் சத்தம.

இங்ஙனஞ் சத்தப் பிரமாணம் முற்றிற்று.

வாக்கியம் எ - து வாக்கியத்தைப் பகுக்கின்றது. இறைவன் வாய் மொழி எ - து வைதிகத்தில் விசேடங் கூறுகின்றது.

அற்றேல், வேதம் அநாதியாகலான் எங்ஙனம் இறைவனாற் சொல் லப்பட்ட தெனின் ; அற்றன்று, வேதம பௌருஷேயம் (புருஷனால் சொல்லப்பட்டது), வாக்கியக் கூட்ட மாகலான், பாரத முதலியன போன்று என்னும் அநுமானத்தினால் பௌருஷேயத்தன்மை சித்தித் தலினால். (இவ்வநுமானத்தில்) நினைக்கப்படும் கருத்தா உண்டெனல் உபாதியெனின் ; அற்றன்று, கௌதமர் முதலியோரால் சிஷ்ய பரம் பரையில் வேதமும் கருத்தாவோடுங் கூடியதென நினைக்கப்படுதலின் ஏதுவினும் வியாபித்தலானும், ' ஆலோசித்த அவனிடமிருந்து வேதம் மூன்றும் வெளியாயின ' என்னுஞ் சுருதியிருப்பதனாலும் என்க.

அற்றேல், எழுத்துக்கள் நித்தியம் ' அதுவே இந்தக்ககரம் ' என்னும் பிரத்தியபிக்ஞை (முன்னுணாவின் நிகழ்வு) யின் பலத்தால் ; அவ்வாறாகவே எவ்வாறு வேதம் அநித்தியம் எனின் , அற்றன்று, 'உண்டானது ககரம்' ' அழிந்தது ககரம் ' என்பது முதலிய தோற்றத்தால் எழுத்துக்கள் அநித்தியமாகலான் ; ' அதுவே இந்தக் ககரம் ' என்னும் பிரத்தியபிக்ஞை ' அதுவே இந்தத் தீபச்சுடர் ' என்பதுபோல (சமான) சாதிபற்றி யென்க எழுத்துக்கள் நிததமெனக் கொள்ளினும் முன்பின் தொடர்பாடுடைய விசிட்ட வாக்கியம் அநித்தியமே யாம். ஆகையால் இறைவனாற் சொல்லப்பட்டதே வேதம். மனுமுதலிய ஸ்மிருதிகளும் (ஆன்றோர்) ஆசாரங்களும் வேதமூல முடைமையால் பிரமாணமேயாம். ஸ்மிருதிக்கு மூலமான வாக்கியங்கள் இக்காலத் தோதபபடாமையால் அதன் (ஸ்மிருதி) மூலவடிவமான சிலசாகைகள் அழிந்தன வென்று கற்பிக்கப்படுகின்றன

அற்றேல், ஓதபபடும் வேதவாக்கியம் அழிந்ததெனக் கற்பித்தலும், சிதறிய தெனச் சொல்லுதலும், பொருந்தாமையால என்றும் அனுமேய வேதம் மூலமெனின் ; அற்றன்று, அங்ஙனமாயினும் எழுத்துக்களின் தொடர்ச்சி ஞான மின்மையினுல் அறிவை யுண்டாக்குதல் அதற்குப் பொருநதா தாகையால்.

அற்றேல், 'இபபதங்கள் நினைக்கப்படும் பொருட் சம்பந்த முடையன, ஆகாங்க்ஷை முதலியவற்றை யுடைய பதஙகளின் கூட்டமாயிருத்தலால், தண்டத்தினுல் பசுவைக கொண்டுவா, எனனும் நமது வாக்கியம் போல ' என்னும் அனுமானத்தினுலேயே (பொருள்களின்) சமபந்த ஞான முண்டாகின்ற படியால் சத்தம் வேறு பிரமாண மன்றெனின் ; அற்றன்று, அனுமிதியினும் சத்தத்தா லுண்டான ஞானம் வேறென்பது, ' சத்தத்தா லுணர்கின்றேன் ' எனனும் அனுவியவசாய ஞானத்தைச் சாக்ஷியாக வுடையது என்று அனைவரும் அங்கீகரிபபதனுல்.

அற்றேல், அருத்தாபத்தியும் வேறு பிரமாணமாம். 'பருத்திருக்குந் தேவதத்தன் பகலுண்பதில்லை ' என்று கண்டாயினும் கேட்டாயினும் பருத்தல் வேறு வழியாகப் பொருந்தாமையால் இரவிலுண்டல் அருத்தாபத்தி (பிரமாணம்) யாற் கற்பிக்கப் படுகின்ற தெனின் ; அற்றன்று, தேவதத்தன் இரவிலுண்கின்றான், பகலுண்ணுதிருந்தும் பருத்திருத்தலின் என்னும் அனுமானத்தானேயே இரவிலுண்டல் பெறப்படுகின்றமையால்.

நூறறில் ஐம்பதுண்டெனும் சம்பவ (பிரமாணம்)மும் அனுமானமே. ' இவ்வாலில் இயக்கனுளன் ' என்னும் ஐதிகப் பிரமாணமும் கூறிஞோனின்னுனென வறியபபடாத சத்த (பிரமாணம்) மேயாம். சேட்டை (குறிப்பு) யும் சத்தத்தின் வழியாகவும் அனுமானத்தின் வழியாகவும் வியவகாரத்திற்குக் காரண மாகையால் வேறு பிரமாணமன்று. ஆகையால் பிரத்தியக்ஷம், அனுமானம், உவமானம், சத்தம் என்னும் நான்கே பிரமாணங்கள்.

ஞானங்களுக்கு * அதைபுடையதன்கண் அதுவிசேடணை
மாக ங்கழுந்தனமை † தனுல கிரகிக்கததக்கதா அலலது ‡
ஞல் கிரகிக்கத் தக்கதா என்று விசாரிக்கப்படுகின்றது. ஆண்டுச்
மாவது ஞானங்களுக்கு பிராமாணியம் (பிரமாத்தன்மை).

§ அதன் கண்ணுள்ள அப்பிராமாணியத்தைக் கிரகிக்காததும், ஞானத்தைக் கிரகிப்பதும் ஆகிய ‖ எல்லா சாமக்கிரியால் கிரகிக்கத்தக்கதா அன்று என்பது. ஈண்டு விதிபக்கம் (முன்னையது) தன்னுல் கிரகிக்கத் தக்கது. விலக்கு பக்கம் (பின்னையது) பிறிதாற் கிரகிக்கத்தக்கது. அனுமானத்தால் கிரகிக்கத்தக்க தாகலின் (நையாயிகர் மதத்தில்) சித்த

---

* அதையுடையதன் எ - து பிராமாணியத்தின் இலக்கணங் கூறு

† தன்னுல் என்னுஞ் சத்தத்திற்குப் பொருள்:— பிராமாணிய ஆசிரயத்தைக் கிரகிக்கும் சாமக்கிரி. அச்சாமக்கிரி பிரபாகரர் மதத்தில் வியவசாய ஞானத்தை யுண்டு பண்ணும் ஆன்மா, மனம, இவைகளின் சையோகம் முதலியன. முராரி மிசிரர் மதத்தில் அனுவியவசாய ஞானத்தை யுண்டுபண்ணும் ஆன்மா, மனம் இவைகளின் சையோகம் முதலியன. பட்டர்மதத்தில் அனுமிதி ஞானத்தையுண்டு பண்ணும் வியாப்தி ஞான முதலியன. வேதாந்த மதத்தில் சாக்ஷி ஞானம் முதலியன.

‡ பிறிது என்னுஞ் சத்தத்திற்கு நியாயமதத்தில் அனுமான முதலியன.

§ அதன்கண் - பிராமாணிய ஆசிரய பிரமாஞானத்தில்.

‖ மேலே † இக்குறியிடப்பட்ட டிப்பணியிலுள்ள சாமக்கிரிகளும் அனுமிதி சாமக்கிரியும் என்பது எல்லா சாமக்கிரியாம்.

சாதன தோஷமாகும் * அதனை நீக்க எல்லா சாமக்கிரி எனப்பட்டது, + 'இந்தஞானம் அப்பிரமை' என்றுண்டாகும் ஞானத்தால் பிராமாணியம் கிரகிக்காதபடியால் (ஆண்டு) பாத (மறப்பு)த்தை நீக்க அப்பிராமாணியத்தைக் கிரகிக்காததும் எனபபட்டது. 'இந்த ஞானம் (அயதார்த்தஞானம்) அப்பிரமை' என்றுண்டாகின்ற அநுவியவசாய ஞானததின் கண்ணுள்ள பிராமாணியத்தைக் கிரகிக்கும் கருவிக்கு அபாமாணியத்தைக் கிரகிக்காத தன்மை இல்லாதபடியால் தன்னால் கிரகிக்கப்படுதலின்றாகும் ஆகையால் அதனை நீக்குதற்கு அதன் கண் எனப்பட்டது. அதன் கண் - கிரகிக்கத்தக்க பிரமைத் தன்மைக்கு ஆசிரயமாகிய ‡ பிரமையின் கண் அப்பிராமாணியத்தைக் கிரகிக்காதது என்பது பொருள். கூறிய உதாரணத்தில் § வியவசாய ஞானத்தில் அபாாமாணியத்தைக் கிரகித்ததாயினும் || அநுவியவசாய ஞானத்தில் அதனைக் கிரகிக்காமையால் தன்னலாதல் (தன்னால் பிராமாணியம) பெறப்படும்.

அற்றேல், பிராமாணியந் தன்னாலேயே கிரகிக்கப்படுகின்றது, 'கடத்தை நானறிகின்றேன்' என்னும் அனுவியவசாய ஞானத்தினால் கடமும் கடத்தன்மையு மாகிய இரண்டும்போல அவற்றின் சம்பந்தமும்

---

* அநுவியவசாய ஞானம் பிரமாத்தன்மையின் ஆசிரயமாகிய ஞானத்தினைக் கிரகிபபதாக நையாயிகர் உடன்படினும் பிரமாத்தன்மையை கிரகிபபதாக உடன்படுவதில்லை. ஆகையால் பிரமாத் தன்மையின் ஆசிரயத்தைக் கிரகிக்கும் எல்லா சாமக்கிரியாலும் கிரகிப்படுதலின்றாம இதனால சித்தசாதன தோஷமின்று.

+ பிரமைத் தன்மையை யுடைய ஞானத்தில் தோஷத்தினால் அப்பிரமைத் தன்மையை விஷயஞ்செய்யும் ஞானமென்பது கருத்து. பிராமாணியத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியால் கிரகிக்கபபடுவது இல்லாதிருபபினும் அப்பிராமாணியத்தைக் கிரகிக்காத சாமக்கிரியால் கிரகிக்கப் படுவதற்குப் பாதகம் சம்பவியாது என்பது கருத்து.

‡ பிராந்தியைப் பிராந்தி யென்றுணர்ந்த அநுவியவசாய ஞானத்தின் கண் பிரமைத்தன்மை இருக்கின்றது. எனப்பொருள்.

§ பிராந்தியாக இது சர்ப்பமென்றுண்டான ஞானத்தில்.

|| அப்பிரமையை அப்பிரமை யென்றுணரும் அனுவியவசாய ஞானத்தில் என்பது பொருள்.

விடயமாகலின் * வியவசாய ஞானவடிவ சம்பந்தம் சமமாயிருத்தலினால், முன்னுள்ளதின் விசேடணத்தின் சம்பந்தமே பிரமைத் தன்மை என்னும் பதார்த்தமாகலின் எனின்; அற்றன்று, தன்னாலே பிராமாணியங் கிரகிக்கப்படுமாயின் 'ஜலஞானம் பிரமையா அன்றா' என முதலிற் கண்டபோது பிரமைத் தன்மையின் ஐயம் உண்டாகலாகாது, அநுவியவசாயத்தால் பிராமாணியம் நிச்சயிக்கப்பட்டபடியால்; ஆகையால், தன்னாற் (பிராமாணியம்) கிரகிக்கபபடுத லின்மையால் பிறிதாற் கிரகிக்கத் தக்கதாம்; அஃதெங்ஙனமெனின்: முதலில், ஜலஞானமுண்டான பின்னர் முயன்று சென்று ஜலங் கிடைத்ததாயின் 'முன்னுண்டான ஞானம் பிரமை' பயனுடைய பிரவிருத்தியை யுண்டாக்கினபடியால் 'யாது அங்ஙனமன்றோ அது இங்ஙனமன்று, அப்பிரமைபோல, என்று வியதிரேகி யனுமானத்தால் பிரமைத்தன்மை நிச்சயிக்கப்படுகின்றது. இரண்டாவது முதலிய ஞானங்களில் முன்ஞான திருஷ்டாந்தத்தினால் அதன் சமான சாதியுடைய லிங்கம்பற்றி அந்நுவய வியதிரேகி யனுமானத்தானும் நிச்சயிக்கப்படும்.

பிரமைத்தன்மையி னுற்பத்தியில் குணத்தா லுண்டாக்கப்படுவதே பிறிதா லுண்டாவதாம். பிரமைக்கு அசாதாரண காரணங் குணம். அப்பிரமைக்கு அசாதாரண காரணந் தோஷம், அவற்றுள் (நான்குவிதப் பிரமைகளுள்) பிரத்தியக்ஷத்தில் விசேடணமுடைய விசேடியத்தோடு (இந்திரிய) சம்பந்தமும், அநுமிதியில் வியாபக முடையதில் வியாப்பியமென்னும் ஞானமும், உவமிதியில் யதார்த்தமான சாதிருசிய ஞானமும், சாப்தஞானத்தில் யதார்த்தமான யோக்கியதை முதலியவற்றின் ஞானமும் குணங்கள் என்று. இன்னும் இவை முதலியவற்றை † யூகித் தறிய

* அநுவியவசாய ஞானத்திற்கு கடம் கடத்தன்மை இவற்றோடு வியவசாய ஞானவடிவ சம்பந்த மிருக்கின்றது. அதுபோல கடம் கடத்தன்மை இவற்றின் சம்பந்த ஞானத்திலும் அந்த அநுவியவசாய ஞானத்திற்கு அதே வியவசாயஞானம் சம்பந்தமாம்; அதனால் வியவசாயஞான வடிவ சம்பந்தம் சமமா யிருக்கின்றது எனப்பட்டது.

+ சங்கு மஞ்சள் என்பது முதலிய அப்பிரமையில் காமாலை முதலிய தோஷம், இது வெள்ளி என்பது முதலிய மயக்கத்தில் பளபளப்பு முதலிய சாதிருசியம் தோஷம், கற்கண்டு கசப்பில் பித்தம் முதலியவை தோஷம் இவைகளை ஊகித்தறிய வேண்டும் என்பது பொருளாம்.

வேண்டும், மூன்னுள்ளதின்கண் (மயக்கவெள்ளி)விசேடணத்தின் அபாவம் அநுவியவசாய ஞானத்தினுல் அறியப் படாமையால் அப்பிரமைத் தன்மை பிறிதானேயே கிரகிக்கப்படுகின்றது. மாகாலே முதலிய தோஷத்தாலுண்டாவதே (அப்பிரமையில்) உற்பத்தியில் பிறிதாலுண்டாவதாம்.

அற்றேல் (மீமாம்சகரில் பிரபாகரர்மதம்), எல்லா ஞானங்களும் யதார்த்த மாகையால் அயதார்த்த ஞானமே யில்லே இப்பியின்கண் 'இது வெள்ளி' என்னும் ஞானத்தினுல் முயற்சி காணப்படுவதால் அந்நியதாக்கியாதி (ஒன்று மற்றென்றாகத் தோன்றுதல்) சித்திக்கின்றதெனல் கூடாது, வெள்ளியின் ஸ்மிருதியும் எதிரிலுள்ளதின் ஞானமுமாகிய இவ்விரண்டானேயே பிரவிருத்தி சித்திக்கின்றபடியால். நினேக்கப்பட்ட இஷ்ட பதார்த்தத்தோடு எதிரிலுள்ளதற்கு வேறுபாட்டைக் கிரகிக்காமையே யாண்டும் பிரவிருத்திக்கு ஏதுவாகையால், 'இது வெள்ளியன்று' என்பது முதலியவற்றில் (பேதக்கவர்ச்சி யிருத்தலின்) மிகைபடக்கூறல் (அதிபபிரசங்கம்) இன்மையால் எனின் ; அற்றன்று, மெய்யாகிய வெள்ளியின்கண் எதிரிலுள்ளதை விசேடியமாகவும் வெள்ளித்தன்மையை விசேடணமாகவும் அறிகின்ற ஞானம் இலாகவமாய்ப் பிரவிருத்தியை யுண்டாக்குவதாகையால், இப்பியிலும் வெள்ளியின் ஆசையுடைய புருடனுக்குப பிரவிருத்தியை யுண்டாக்குவதால் விசிட்ட ஞானமே அநுமானிக்கப்படுதலின் என்க.

அயதாாததம மூனறு விதம ; சமுசயம, விபரீதம, தருக்கம என்னும் பேததகதினுல். சமுசயம் ஒருதருமியில் விரோதமான பல தருமங்களால் விசேடிக்கப்பட்ட ஞானம் ; அது தாணுவோ புருடனே வென்பது. விபரீதம் மித்தியாஞானம் ; அது இப்பியில் இது வெள்ளி என்பது. தருக்கம் வியாப்பியத்தை ஆரோபிப்பதனுல் வியாபகத்தை ஆரோபிப்பது ; அது வன்னியில்லே என்றால் அக்கால் புகையுமில்லே என்பது.

அயதார்த்தம் எ - து அயதார்த்த அனுபவத்தைப் பகுக்கின்றது. சொப்பனம் மானத விபரீத வடிவங்க ளாதலின் மூன்றுவித மென்றதற்கு விரோத மில்லே. ஒருதருமியில் எ - து சமுசயத்தினிலக்கணங் கூறுகின்றது. 'கடம படம்' என்னும் சமூகாலம்பன (பலதருமிகளே முக்கிய விசேடியமாக வுடையதென்னுந் திரட்சிபற்றிய ஞானம்)

ஞானத்தில், அதிவியாப்தியை நீக்க ஒரு தருமியில் எனப்பட்டது. 'கடம் திரவியம்' என்பது முதலியவற்றில் அதிவியாப்தியை நீக்க விரோதமான எனப்பட்டது. 'படத்தன்மையினும் மாறுபட்ட கடத் தன்மை யுடையது' என்னுமிடத்தில் அதிவியாப்தியை நீக்க அநேகம் எனப்பட்டது.

மித்தியா எ - து விபரீதத்தி னிலக்கணங் கூறுகின்றது. அது இல்லாததில் அதை விசேடணமாக வுடைய நிச்சயம் எனபது பொருள். வியாப்பியத்தை எ - து தருககத்தி னிலக்கணங் கூறுகின்றது. தருக்கம் விபரீதத்தி லடங்கு மாயினும் பிரமாணத்திற் கனுகூல (பிரமாணத்தாலாகும் பிரமை ஞானத்தில் பிரதிபந்தத்தை நீக்கும் உபயோகம்) மாக லான் வேறாகக் கூறப்பட்டது.

ஸ்மிருதி ஞானம இரண்டுவிதம ; யதாாதகமும, அய தார்தகமும் என. யதாாத்தம பிரமையிலுலாவது. அயதார்த தம் அப்பிரமையிலுலாவது.

ஸ்மிருதி எ - து ஸ்மிருதியைப் பகுக்கின்றது.

சுகம் - எல்லோருக்கும் அனுகூலமாக அறியப்படுவது.

துக்கம - பிரதிகூலமாக அறியப்படுவது.

இச்சை - காமம்.

துவேஷம் - குரோதம்.

பிரயத்தனம் - முயறசி.

தருமம் - விதிவினையாற்றோன்றியது.

அதருமம் - விலக்கு வினையாற் றோன்றியது.

புத்தி முதலிய எட்டும் ஆன்மாவிற்கே உரிய விசேட குணங்கள்.

புத்தி, இச்சை, பிரயத்தனம் என்னும் மூன்றும் நித்தியமும் அநித்தியமுமாம். இறைவனுடைய புத்தி முதலியன நித்தியம். சீவனுடைய புத்தி முதலியன அநித்தியம்.

எல்லோருக்கும் எ - து சுகத்தி னிலக்கணங் கூறுகின்றது 'யான் சுகி' என்னும் அநுவியவசாய ஞானத்தா லறியப்படும் சுகத்தன்மை முதலியவையே இலக்கணம் ரண்டுக்கூறிய இலக்கணம் சொரூபத தைச் சொல்லுதல் என்றுணரத்தக்கது (இவ்விலக்கணம் தோடமுடை யது அது விரதிக்கு விடய சுகம் வெறுப்பாதலின்).

வாசனை மூன்று விதம , வேகமும், பாவனையும, திதித தாபக (நிலை பெறுநதுகை) மூம எனறு வேகம பிருதிவி முதலிய நான்கினும மனததினு மிருப்பது.

வாசனை எ - து வாசனையைப பகுக்கின்றது வாசனைத்தன்மைச சாதியுடையது வாசனை. வேகம் எ - து வேகத்தி னிருப்பிடங் கூறு கின்றது வேகத்தன்மைச் சாதியுடையது வேகம்

பாவனை அனுபவததினினறு முண்டானதாய் நினைவிற் கேதுவானது. அது ஆனமாவின மாததிர முளது.

அனுபவம் எ - து பாவனையி னிலக்கணங கூறுகினறது அனு பவத்தின் அழிவில் அதிவியாபதியை நீக்க நினைவிற்குக காரணமென் றும் ஆன்மா முதலியவற்றில் அதிவியாப்தியை நீக்க அனுபவத்தினினறு முண்டானதாய் என்றும கூறியவாறு. நினைவும் பாவனையை யுண்டாக்கு கின்றதென்று நவீனர் கூறுவர்.

திதிததாபகம வேறு பிரகாரமாகச் செய்யபபட்டதற்கு மீண்டும் அவ்வித அவஸதையைச் சமபாதிபபது. அது பாய் முதலிய பிருதிவியின்கண் ணுள்ளது.

வேறு எ - து திதித்தாபகத்தின் இலக்கணங் கூறுகின்றது. சங் கியை முதலிய எட்டும், நைமித்திக திரவத்தன்மையும், வேகமும், திதித் தாபகமும் என்னு மிவைகள் சாமானிய (பொது) குணங்கள் ஏனைய உருவமுதலியவை விசேட (சிறப்பு) குணங்கள். திரவியத்தைப் பகுக் கும் உபாதி இரண்டின் சமான அதிகாணத்தி லிராத சாதியுடையது விசேடகுணம்

## 3 - கருமம்.

கருமம் சலனவடிவம். எழும்பல்-மேலிடங் கூடுதற்கேது. வீழ்தல் - கீழிடங் கூடுதற்கேது. குவிதல் - உடல் சுருங்கு

தற்கேது. விரிதல் - உடல் விரிதற்கேது. ஏனையவனைத்தும் நடத்தலாகும்.

சலன எ - து கருமத்தி னிலக்கணங் கூறுகின்றது. மேலிடம் எ - து எழும்பல் முதலியவற்றின் காரியபேதங் கூறுகின்றது. உடல் மடங்குதலை யுண்டாக்குங் கருமம் குவிதல். பரவுதலை யுண்டாக்குவது விரிதல் என்பது பொருள்

4 - சாமானியம்.

சாமானியம் (சாதி) நித்தியமாய் ஒன்றாயப் பலவற்றில் அனுகதமா யிருப்பது. திரவியம், குணம், கருமம் என்னும் இம்மூன்றினு மிருப்பது. அது இருவகைத்து; பரம், அபரம் என்னும் பேதத்தினால். பரம சத்தா (மிகுதியி லிருப்பது) சாதி, அபரம (குறைவிலிருப்பது) திரவியத்தன்மை முதலியன.

நித்தியமாய் எ - து சாமானியத்தி னிலக்கணங் கூறுகின்றது. சையோகத்தில அதிவியாப்தியை நீக்க நித்தியமென்றும், ஜலபரமாணு உருவத்தில் அதிவியாப்தியை நீக்க ஒன்றாயென்றும், பரமாணுவின் பரிமாண முதலியவற்றில் அதிவியாபதியை நீக்கப பலவற்றிலென்றும் கூறியவாறு அனுகதமென்பது சமவாய சம்பந்த முடையது கட முதலியவற்றின் அத்தியந்தா பாவம் கடமுதலியவற்றில் அனுகதமாக விருந்தாலும் (விசேடண விசேடியத்தன்மைச் சம்பந்தமா யிருப்பதனால) சமவாய சம்பந்தத்தா லிருப்பதன்று என்பதனால் அபாவ முதலியவற்றில் அதிவியாப்தி யில்லை.

5 - விசேடம்.

விசேடம் நித்திய திரவியத்தி லுள்ளனவாய் அவற்றை வேறு பிரிப்பன.

நித்திய எ - து விசேடத்தி னிலக்கணங் கூறுகின்றது.

6 - சமவாயம்

சமவாயம் நித்திய சம்பந்தம். அது அயுதசித்த விருத்தி (பிரிவற்றறி லுள்ளது) யாம். எவ்விரண்டனுள் ஒன்று அழி

வின்றி மற்றொன்றைப் பற்றியே நிற்குமோ அவ்விரண்டும் அயுத சித்தங்கள் ; அவை, அவயவ அவயவிகள், குண குணி கள், கிரியை கிரியையுடையவைகள், சாதி வியக்திகள், விசேடம் நித்தியத் திரவியங்கள் என்னு மிவைகளாம.

நித்தியம் எ - து சமவாயத்தி னிலக்கணங் கூறுகின்றது சையோகத்தில் அதிவியாப்தியை நீக்க நித்தியமென்றும், ஆகாச முதலியவற்றில் அதிவியாபதியை நீககச் சம்பந்தமென்றுங் கூறியது எவ்விரண்டனுள் எ - து அயுத சித்த விலக்கணங் கூறுகின்றது 'கரியது கடம்' என்னும் விசிட்ட ஞானம் விசேடண விசேடிய சம்பந்தத்தை விடயமாக வுடையது, விசிட்ட ஞானமாகையால், தண்டி என்னும் ஞானம்போல என்ற (அனுமானத்) தினால் சமவாய சம்பந்தஞ் சித்திக்கின்றது. அவயவ அவயவிகள் எ - து திரவிய சமவாயி காரணம் அவயவம், அதனா லுண்டான திரவியம் அவயவி யென்க

7 - அபாவம்.

பிராக (முன்) அபாவம உற்பத்தியின்றி நாசமுடையது. அது காரியத்தின உற்பத்திக்கு முன்னுளது.

உற்பத்தியின்றி எ - து பிராகபாவத்தி னிலக்கணங் கூறுகின்றது. ஆகாச முதலியவற்றில் அதிவியாப்தியை நீக்க நாசமுடைய தென்றும், கடமுதலியவற்றில் அதிவியாப்தியை நீக்க உற்பத்தியின்றி யென்றுங் கூறியவாறு. பிரதியோகியின் சமவாயி காரணத்தின்கண்ணிருப்பதாய், பிரதியோகியை யுண்டாக்குவதாய், உண்டாகுமென்னும் வியவகாரத்திற்கு ஏதுவா யிருபபது பிராகபாவம்.

பிரத்துவமச (பின்) அபாவம் உற்பத்தி யுடையதாய் நாசமினறியது. அது காரியத் தோற்றத்தின் பின்னுளது.

உறபத்தியுடையதாய எ - து பிரததுவமசா பாவதது னிலககணங கூறுகின்றது. கடமுதலியவற்றில் அதிவியாப்தியை நீக்க நாசமின்றிய தென்றும், ஆகாச முதலியவற்றில் அதிவியாப்தியை நீக்க உற்பத்தி யுடையதென்றுங் கூறியவாறு. பிரதியோகியா லுண்டாவதாய், பிரதியோகியின் சமவாயி காரணத்தின்கண்ணிருப்பதாய், அழிந்ததென்னும் வியவகாரத்திற் கேதுவா யிருப்பது, பிரத்துவம்சாபாவம்.

அத்தியந்த (முழுதும்) அபாவம் மூன்று காலத்திலு முளதாய சம்பந்தத்தால் வரைந்து கொள்ளப்படும் பிரதி யோகித தன்மையை யுடையது. அது பூதலத்தில் கடமில்லை என்பது.

மூன்று காலத்திலும எ - து அத்தியந்தாபாவத்தினிலக்கணங் கூறு கின்றது. அந்நியோன்னியா பாவத்தில் அதிவியாப்தியை நீக்க சம்பந் தத்தால் வரைந்து கொள்ளப்பட்ட என்றும், பிராக்துவம்சம் பிராகபாவ மென்னு மிரண்டிலும் அதிவியாப்தியை நீக்க மூன்று காலத்திலு முளா தாயென்றுங் கூறியவாறு.

அந்நியோன்னிய (ஒன்றொன்றுகாமை) அபாவம் தாதாத் மிய (அதன் வடிவம்) சம்பந்தத்தால் வரைந்து கொள்ளப்பட்ட பிரதியோகித் தன்மையை யுடையது. அது கடம் படமன்று என வரும்.

தாதாத்மிய எ - து அந்நியோன்னியாபவத்தி னிலக்கணங் கூறு கின்றது. பிரதியோகித் தன்மையை வரைந்து கொள்வதனை ஆரோ பிப்பதனு லுண்டாகும் சம்பந்த வேறுபாட்டால் ஒரு பிரதியோகியை யுடைய அத்தியந்தாபாவமும் அந்நியோன்னியா பாவமும் அநேகமாம். தனித்த தேவதத்தனதபாவத்திலும் ' தண்டியினபாவம் ' என்னுந் தோற்றத்தால் விசிட்டாபாவமும், ' ஒன்றுளதாயினு மிரண்டில்லை ' என்னுந் தோற்றத்தால் இரண்டன் தன்மையினுல் வரைந்து கொள்ளப் பட்டதனபாவமும், சையோக சம்பந்தத்தால் கடமுடையதில் சமவாய சம்பந்தத்தால் கடாபாவமும் எனப் பலவாய் விரிதல் காண்க. அவ்வாறே கடமிருப்பினும் அந்தந்தக் (வெவ்வேறு வகைப்பட்ட) கடமின்மையி னுல் கடத்தன்மையால் வரைந்து கொள்ளப்படும் பிரதியோகித் தன் மையையுடைய பொதுவான அபாவம் வேருன தென்க. இவ்வாறே அந்நியோன்னியாபாவமுமாகும்.

கடத்தன்மையால் படமில்லை என்னும் வேற்று நிலைக்களத்தின் தருமத்தால் வரைந்து கொண்டதின் அபாவம் வேறெனக் கொள்ளத் தக்கதன்று, படத்தில் கடத்தன்மை இல்லை என்பதே அதன் பொரு ளாகலின். வேறெனில் அது கேவலாந்நுவயித்தன்மையாகும்.

சாமயிகா பாவமும் அத்தியந்தாபாவமே. (அது) சமய விசேடத்தில் தோன்றுவது; கடாபாவமுடையதில் கடத்தைக் கொண்டு வரும்போது அத்தியந்தாபாவம் வேறிடத்தில் போத லில்லாவிடினும் தோன்றாமை யானும், கடத்தை விலக்கினபோது தோன்றுகின்ற படியானும், பூதல கடங்களின் சையோகத்தின் பிராகபாவமும் பிரத்துவம்சா பாவமும கடத்தின அத்தியந்தா பாவத்தின
பண்ணும் நியம முடையனவாய்க் கற்பிக்கப்படுகின்றன கடமுடையதில் அச் சையோகத்தின் பிராகபாவமும் பிரத்துவம்சாபாவமும் இன்மையால் அத்தியந்தா பாவத்தின் தோற்றமில்லை எனவும், கடத்தை விலக்கினபோது சையோகத்தின் துவம்ச மிருத்தலால் தோன்றுகின்றதெனவுங் கொள்க.

'வெறுமையான இடம்' என்பதனாலேயே இல்லை என்னும் வியவகாரம் பொருந்துகையில் அபாவம் வேறுபதார்த்த மன்றென்பர் குருமதத்தைச் சேர்ந்தார். அது பொருந்தாது, அபாவத்தை ஒப்பாவிடின் வெறுமைத் தன்மையை (இன்னதென) நிரூபிக்கக் கூடாதாகையால்.

அபாவத்தின் அபாவமும் பாவமே, வேறபாவ மன்று, அநவஸ்தை நேர்தலின். துவம்சத்தின் பிராகபாவமும் பிராகபாவத்தின் துவம்சமும் பிரதியோகியே யென்று பிராசீனர் கூறுவர். அபாவத்தின் அபாவமும் வேறே, மூன்றாம் அபாவம் முதலபாவ வடிவமாதலின் அநவஸ்தை யில்லையென்பர் நவீனர்.

சர்வ பதார்த்தங்களும் முறைப்படி கூறியவற்று ளடங்குதலின் ஏழே பதார்த்தங்க ளென்பது பெற்றாம்.

சர்வ பதார்த்தங்களும் எ - து பிரமாணம், பிரமேயம், சமுசயம், பிரயோசனம், திருஷ்டாந்தம், சித்தாந்தம், அவ்யவம், தருக்கம், நிர்ணயம், வாதம், ஜல்பம், விதண்டை, ஏதுவாபாசம், சலம், ஜாதி, நிக்கிரகஸ்தானம என்பவற்றின் தத்துவஞானத்தால் மோக்ஷமடைதல் (ஆகும்) என்று நியாய சாத்திரத்தில பதினாறு பதார்த்தங்கள் சொல்லப்பட்டபடியால் எங்ஙனம் ஏழென்பது என்னும் வினாவிற்கு விடைகூறுகின்றது. சர்வமும் எழில் அடங்கு மென்பது பொருள்.

ஆன்மா, சரீரம், இந்திரியம், அர்த்தம், புத்தி, மனம், பிரவிருத்தி, தோடம், பிரேத்தியபாவம், பலம், துக்கம், அபவர்க்கம்; எனப்

புண்ணிருவகைப் பிரமேயம். பிரவிருத்தி - தருமா தருமங்கள். தோடம் - இராகத் துவேஷ மோகங்கள் இராகம் - இச்சை. துவேஷம் - கோபம். மோகம் - சரீர முதலியவற்றில் ஆன்மமபக்கம். பிரேத்தியபாவம் - மரணம். பலம் - போகம். அபவர்க்கம் - மோக்ஷம். அதுவும் * தனது சமான அதிகரணத்துள்ள துக்கங்களின் பிராகபாவத்தோடு சமான காலத்திராத துக்க துவம்சமாம் (நாசம்) பிரயோசனம் - சுகப் பிராப்தி யும் துக்கத்தின் அழிவும் திருஷ்டாந்தம் - அடுக்களை முதலியன. சித்தாந்தம் - பிரமாண முடையதாக அங்கிகரித்த பொருள் நிர்ணயம் - நிச்சயித்தல். அது பிரமாணத்திற்கு பயன் வாதம் - தத்துவத்தை அறியவேண்டுமென்ற இச்சையுடையவன் கதை. ஜல்பம்-சாதனமிரண்டு டையதில் வெல்லும் வேட்கை யுடையோன் கதை விதண்டை - தனது பக்ஷத்தைத் தாபிக்காத கதை கதையென்பது கூறுவார் பலரை யுடையதாய்ப் பூர்வபக்க சித்தாந்தங்களைக் கூறும் வாக்கியங்களின் கூட் டம். சலம் - வேறு அபிப்பிராயத்தோடு கூறியவாக்கியத்திற்கு வேறோர் பொருளைக் கற்பித்துக்கொண்டு தூஷிப்பது.

ஜாதி - போலியான சமாதானம். சாதருமிய (பொது வியல்பு) சமை, வைதருமிய (வேற்றியல்பு) சமை, உத்கருஷ (உயர்வு) சமை, அபகருஷ (தாழ்ச்சி) சமை, வருணிய (புகழ்ந்துரை) சமை, அவருணிய (பழித்துரை) சமை, விகற்பசமை, சாத்திய சமை, பிராபதி சமை, அப ராப்தி சமை, பிரசங்க சமை, பிரதி (வேறு) சமை, அனுத்பத்தி (உத் பத்தியின்மை) சமை, சமுசய சமை, பிரகரண சமை, ஏது சமை, அருத் தாபத்தி சமை, அவிசேஷ சமை, உபபத்தி சமை, உபலப்தி சமை, அனுபலப்தி சமை, நித்திய சமை, அநித்திய சமை, காரியசமை, அகா ரிய சமை, என்பன ஜாதிகளாம். (சமை - போலியன சமாதானம்),

வாதிகள் தோல்வி யுறுதற்கேது நிக்கிரகஸ்தானம். பிரதிக்ஞை அழிவு, வேறு பிரதிக்ஞை, பிரதிக்ஞை விரோதம், பிரதிக்ஞை விடுதல்,

* அஞ்ஞரிடத்து சமுசார காலத்துண்டாம் யாதாயோர் துக்க துவம்சத்தில் அதிவியாபதியை நீக்க "துக்கப் பிராகபாவத்தோடு சமான காலத்திராத" என்றும், முத்தரான சுகர் முதலானவர்களின் மோக்ஷத் தில் அவ்வியாப்தியை நீக்க 'தனது சமான அதிகரணத்துள்ள' என் றுங் கூறியவாறு.

வேறேது, வேறு பொருள், பொருளின்மை, பொருளுணராப்படாமை, போலிப்பொருள், காலம் பெறுமை, குன்றக்கூறல் (அற்பப் பிரதிக்ஞை), மிகைபடக் கூறல் (அதிக பிரதிக்ஞை அல்லது அதிக ஏது), கூறியது கூறல், பின் பேசாதிருத்தல் (அனுவாதஞ்செய்ய ஆற்றலின்மை), அஞ்ஞானம், அப்ரதிபா (விடை விளங்காமையால் சும்மா விருத்தல்), தடுமாற்றம், மதானுக்ஞை (தன் பக்கங் குற்றங்களையாது பிறன் பக்கங் குற்றங்கூறல்), பிறன்றேல்வியைக் கூறாதிருத்தல், தோல்வியல் லதனைத் தோல்வி யெனல், சித்தாந்தப்போலி, ஏதுப்போலி என்பன நிக்கிரகஸ் தானங்கள். ஏனையவை வெளிப்படை.

அற்றேல், கைத்தலத்தில் நெருப்பை ஏந்தியபோதும் தடையிருப்பின் சூடுண்டாகாமையால் சக்தியென்பது வேறு பதார்த்தமெனின்;— அற்றன்று தடையினபாவம் சர்வ காரியங்களுக்கும் காரணத்தன்மையால், சக்தி பயன்படாமையின், காரணத் தன்மையே சக்தி யென்னும் பதார்த்த மாகலின் என்க. அற்றேல், சாம்பர் முதலியவற்றால் வெண்கல முதலியவற்றில் தூய்மை காணப்படுதலினால் ஆதேய (ஒருசார்பு பற்றியது) சக்தி அங்கீகரிக்க வேண்டுமெனின் ; அற்றன்று, சாம்பர் முதலியவற்றின் சம்பந்தகாலத் திருப்பதாகிய தீண்டக் கூடாததைத் தீண்டுத (அசுத்தம்) லைப் பிரதியோகியாக வுடைய சர்வாபாவத் தோடுங் கூடிய, சாம்பர் முதலியவற்றின் சம்யோகத்தி னழிவே சுத்தியென்னும் பதார்த்த மாகலின்.

உடைமையும் வேறு பதார்த்தமன்று, விரும்பியபடி கொடுப்பதற்கு யோக்கியமாக இருக்குந்தன்மையே உடைமையாகிய பதார்த்தமாகலின். உடைமையை வரைந்து கொள்வதும் வாங்கல், விலை கொடுத்தல் முதலியவற்றால் அடையப்படுந் தன்மையே.

இனி, விதி விளக்கப்படுகின்றது:— பிரயத்தனத் (முயற்சி) தைத் தோற்றுவிக்கின்றதாகிய செய்ய வேண்டுமென்ற யாதொரு இச்சை யுண்டோ, அதனை யுண்டாக்கும் ஞானத்திற்கு விஷயமாவது விதியாம். அதனை (விதியை)க் கூறுவது வியங்கோள் விகுதி முதலியன. முயற்சியால் முற்றுப் பெறாததில் பிரவிருத்தி காணப்படாமையால், முயற்சியால் முற்றுப் பெறுவதில் பிரவிருத்தி காணப்படுவதால், முயற்சியால் முற்றுப்பெறு மென்னுஞ்ஞானம் பிரவிருத்தி (தொழில்)யை யுண்டாக்குவது. விஷத்தைப் புசித்தல் முதலியவற்றிலும் பிரவிருத்தி யுண்டாகு

மெனின்;—அற்றன்று, விரும்பப் படுதற்குச் சாதனத் தன்மையாகிய இலிங்க முடைய முயற்சி முற்றுப்பெறு மென்னும் ஞானம் காமியஸ்தல (ஜ்யோதிஷ்டோமாதி கரும) த்திலும் விதித்தகாலத்தில் தூய வாழ்வின் * ஞானத்தாற் றோன்றிய முயற்சியால் முற்றுப்பெறு மென்னும் ஞானம் நித்தியஸ்தல (சந்தியாவந்தன) த்திலும் (ஆசௌசாதி வடிவ) நிமித்த ஞானத்தாற் றோன்றிய முயற்சியால் முற்றுப்பெறு மென்னும் (கிரகணகால ஸ்நானாதிகளின்) ஞானம் நைமித்திக ஸ்தலத்திலும் பிரவிருத்திக் கேதுவாகலின். தனது (பிரவிருத்திக்கும் புருடனுடைய) விசேடணத்தினது (இச்சை முதலியவற்றின) சம்பந்தத்தின் ஞானத்தால் தோன்றும் தன்மையானது (மூன்றினும்) தொடர்ந்திருத்தலின் (முயற்சியாற் சாதிக்கபடுமென்னும் ஞானம) வெவ்வேறன்று, (மற்றோ ஒன்றேயாம்) என்பர் குருமதத்தார். அது பொருந்தாது, முயற்சியால் முற்றுப பெறும், இஷ்டசாதனத் தன்மையின்ஞானமே, (சாதனம மூன்றாகலின் ஞானமும் மூன்றாகும் என்பது கருத்து) செய்யவேண்டுமென்ற இச்சை வழியாக முயற்சியை யுண்டாக்குவது என்று சுருங்கக் கொள்ளுவதனுல. நித்திய கருமம் விரும்பியதை யடையச் சாதனமாகாமையால் அதில் பிரவிருத்தி யுண்டாகா தென்பதில்லை, ஆண்டும் பிரத்தியவாய (விதித்ததைச செய்யாமையால் வரும் தோஷம்) த்தின் நீக்கமும், பாபத்தின் அழிவும் பயனுகக் கற்பித்தலால் ஆகையால் முயற்சியால் முற்றுப் பெறும் விரும்பபபட்டதை அடைதற்கு எதுவாயிருககின்றது என்னுந் தன்மையே வியங்கோள்விகுதி முதலியவற்றிற்குப பொருள்.

அற்றேல் ' சுவர்க்கம் விரும்புவோன் ஜோதிஷ்டோம மென்னும் யாகத்தால் வேட்குக ' என்னுமிடத்தில் வியங்கோள் விகுதியால் சுவர்க்கத்திற்குச் சாதனமாகிய காரியம் (யாகம்) உணரப்படுகின்றது, விரைவிற்கெடும் யாகம் காலாந்தரத்திலுண்டாகும் சுவர்க்கத்திற்குச் சாதனமாதல் பொருந்தாமையால், அதற்குத் தகுதியாகிய நிலைத்தகாரியமாகிய அபூர்வமே விகுதிக்குப் பொருள். காரியம் முயற்சியால் முற்றுப்பெறுவது, முயற்சி செயப்படு பொருளுடைத்தாகலான ' செயப்படு பொருள் யாது ' என்னும் அவாய் நிலைக்கண் யாகம் செயப்படு பொருளாய் முடியும், ' எவனுடைய காரியம் ' என அதிகாரியினது ஆகாங்க்ஷை யுண்டாகும்போது ' சுவர்க்கம் விரும்புவோன் ' என்னும் பதம் அதிகாரி

* ஞானத்தாற் றோன்றிய ஞானம் என வொட்டுக.

மேலதாய் முடிவு பெறும், காரியத்தை அறிகின்றவன் அதிகாரி, அதனால் ' ஜோதிஷ்டோம மென்னும் யாகமாகிய செயபபடுபொருள் சுவர்க்கத்தை விரும்புவோனற் செய்யத்தக்கது, என்று வாக்கியார்த்தம் பொருந்துகின்றது, ' ஜீவித்திருக்கும் வரை யெரியோம்புக ' என்னும் இவ்விதி வேதத்தின் கண்ணதாகலின் நித்திய விதிவாக்கியத்திலும் அபூர்வமே சொற்பொருளாகக் கொள்ளத்தக்கது, ' பிணியின்மை விரும்புவோன் மருந்தருந்துக ' என்பது முதலிய லௌகிக வியங்கோள் விகுதிக்கு இலககணையால் கிரியையாகிய காரியமே பொருள் எனின் ;— அற்றன்று, யாகத்தின் கண்ணும யோக்கியதை இல்லை என்ற நிச்சயமில்லாதபடியால் (யாகம்) சாதனமாகத் தோனறின பின்னர் அதனை (சாதனத் தன்மையை) நிர்வகிக்கும பொருட்டு அவாநதர (இடை) வியாபாரமாக அபூர்வங்கொள்ள வேண்டியதாகையால். ' புகழ்தலாதியாற் கெட்டது ' என்னும் சுருதியால் யாகத்தினழிவு வியாபார (அபூர்வம்) மன்று, உலகின்கண் சொற்பொருளுணர்ச்சி வலியால் தொழிற் கண்ணேயே முயற்சியால் முற்றுப் பெறுவதாய் விரும்பப்படுவதற்குச சாதனத் தன்மை வியங்கோளா லுணாத்தப படுவதாதலின் வியஙகோட்டன்மையால விதிபபொருளை யுடையது, விகுதித் தன்மையால் முயற்சிப் பொருளையு முடையது, ' சமைககின்றான் ' (எனின்) சமைத்தலைச் செய்கின்றான் என்னும் பொருள் தோன்றக் காண்டலானும், ' யாது செய்கின்றான் ' என்னும் வினவின்கண் சமைக்கின்றான் என்னும விடை நிகழ்தலானும, முயலுதலே விகுதிக்குப் பொருளாதல் தெளியப பட்டமையா னென்பது.

தேர் நடக்கின்ற தென்பதாதியில் (நடத்தலுக்கு) அனுகூலமான வியாபாரத்தில் (முயற்சியின்மையால்) இலக்கணையாம், தேவதத்தன் சமைக்கின்றான், தேவதத்தனாற் சமைக்கபபடுகின்றது அரிசி, என்பன முதலியவற்றில் வினை முதலும் செயப்படு பொருளும் விகுதிக்குப் பொருளல்ல, ஆனால் அவற்றின் ஒருமையாதி யெண்களே பொருளாம், ஆக்ஷேபத்தானேயே அவ்விரண்டும் பெறப்படுவனவாம்.

' நனி வெல்கின்றான் ' என்பது முதலியவற்றுள் வெல்லுதலின் கண் பகுதிக்கே ஆற்றல், (நனி முதலிய) உரிச்சொற்களுக்கு (அதை) விளக்குதல் மாத்திரமேயன்றி, அவற்றின் கண் சக்தியின் றென்க.

பதார்த்த ஞானத்திற்கு மேலான பயன் மோக்ஷம். அஃதெங்ஙன மெனின்; ' மைத்ரேயி! (நீ விரும்பிய) ஆன்மா பார்க்கத் தக்கது, (அபபார்வையாகிய ஞான சாதனம்) சிரவணம் செய்யததக்கது, மநநம் செய்யத் தக்கது, நிதித்தியாசனம் செய்யத்தக்கது, என்னுஞ் சுருதியி னல் சிரவணமுதலியவை தத்துவசாக்ஷாத்கார (உண்மையைக் காண் டல்) த்தில் ஏதுவென அறியபபடுகின்றபடியால். சுருதியினல் தேகா திகளுக்கு விலக்ஷணமான ஆன்மாவுண் டென வுணர்ந்தபோதும் சந்தேக நீக்கம், யுக்தியினல் சிந்தித்தல் வடிவ மநநத்தினல் சாதிக்கத் தக்கதாத லினல், மநனத்திற்கு உபயோகி பதார்த்தங்களை நிரூபிக்கும் வழியாகச் சாத்திரமும் மோக்ஷ வுபயோகியாம், அதன் (மநநம்) பின்னர்ச் சுருதியி னுலுபதேசிக்கப்பட்ட யோகவிதியினல் தெளிதலான நிதித்தியாசனஞ் செய்யப்படுகின்றது, அதன பின்னாத தேக முதலியவற்றினும விலக்ஷண மான ஆன்மசாக்ஷாத்காரம வரும்போது உடம்பு முதலியவற்றில் நானெ ன்ற அபிமான வடிவமாய்ஞ்ஞானம அழியும், அழியவே தோஷ (இரா கத்துவேஷம்) மினமையால் பிரவிருத்தியில்லை, அதனல் புண்ணிய பாவங்களில்லை, அதனல் ஜநநமில்லை; முன்னுள்ள புண்ணிய பாவங் கள் அனுபவத்தாலழியும், அதனலிறுதித் துக்கத்தின் அழிவுபாட்டை இலக்கணமாக வுடைய மோக்ஷமுண்டாகின்றது ஞானமே மோக்ஷசாத னம்; மித்யா ஞானத்தின் நீக்கம் ஞானமாத்திரத்தினற் சாதிககக்கூடி யதாயிருத்தலினலும், ' அதனையே யறிந்து மரணத்தைக் கடக்கின்றான், மோக்ஷத்தின் பொருட்டு வேறு வழியில்லை ' என்னுமிச்சுருதியால் வேறு சாதனம் நிஷேதிக்கப்பட்டிருத்தலினலுமாம்.

அற்றேல் ' ஓ மகாமுனியே அதனடைவிற்குக் காரணம் விகஞான மும் கருமமுஞ் சொல்லப்பட்டன ' என்னுமிதனல் கருமமும் மோக்ஷ சாதனமாகக் கேட்கப்படுகின்றபடியால் ஞானகருமங்க ளிரண்டுங் கலந்தே மோக்ஷசாதன மாகின்ற தெனின் ;— அற்றன்று, 'நித்திய நைமித்திக கருமங்களினற் பாபநாசத்தைச் செய்கின்றவனய், ஞானத் தையுஞ் சுத்தி செய்பவனய், அப்யாசத்தால் பரிபக்குவஞ் செய்க, ஒவ் வோரிடத்தில் மனிதன் அபயாசத்தால் ஞானத்தையுங் கைவல்லியத் தைபு மடைகின்றான் ' என்பது சுருதி. இதன் கருத்து :—நித்திய நைமித்திய கருமங்களை நிட்காமமாகச் செய்வதனல் பாபம் தேயும், தேயவே மனந் தூய்மையாம், தூய்மையால் பிறப்புத் துன்பமென்று

முணர்வுண்டாம் அதனால் மோக்ஷத்தில் விருப்பமாகும் அதன் பின்னர், சிரவணாதிகள் அப்யசிக்கப்படும், படவே ஞானமுண்டாம், ஞானத்தால் மனிதன் கைவல்யத்தை அடைகின்றான் என்பது. ஈண்டு கருமம் ஞானசாதனமெனக் கூறுதலினால் ஞானவழியாகவே கருமம் மோக்ஷ சாதனம், நேராக மோக்ஷசாதன மன்று. ஆகையால் பதார்த்த ஞானத்திற்கு மோக்ஷம் மேலான பிரயோசனம் என்பதே மிகப்பொருத்தமாம்.

கணாதநியாய மதங்களின் விசேஷஞானம் பாலருக்குண்டாகும் பொருட்டு வித்வானான அன்னம் பட்டரால் இயற்றப்பட்டது தருக்க சங்கிரகம்.

தருக்க சங்கிரகம் முற்றிற்று.

இங்ஙனம் ஸ்ரீமது அன்னம் பட்டோபாத்தியாயரால் செய்யப்பட்ட
தருக்க சங்கிரக தீபிகை முற்றிற்று.



# தருக்க சங்கிரக பிழை திருத்தம்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 25 | மாகையால் | பாகைபால் |
| 9 | 16 | வேண்டி | வேண்டி- |
| ,, | 27 | கூர்கின்ரூர் | கூறுகின்றார் |
| 10 | 12 | பெபருட்டெனின்; | பொருட்டெனின்; |
| ,, | 16 | அறிபப்பட்ட | அறியப்பட்ட |
| ,, | 21 | பதரர்த் | பதார்த் |
| 11 | 31 | ஓடத்தில் | ஓரிடத்தில் |
| 12 | 25 | சாதிபுடைய | சாதியுடைய |
| 14 | 15 | கிராணேந்திரி | கிராணேந்திரி |
| ,, | 31 | எளின்; | எனின்; |
| 15 | 14 | ஆரசிரய | ஆசிரய |
| 16 | 6 | நாசிநானி | நாசிநுனி |
| 29 | 12 | காாமாம் | காரமாம |
| 33 | 12 | மூன்றுவிதம் | மூன்றுவிதம் |
| 34 | 14 | தியகூதம் | தியகூதம் |
| 41 | 25 | லாங்குவயி | லாங்குவயி |
| 47 | 20 | பிாமாண | பிரமாண |
| ,, | 21 | உலமிதி | உவமிதி |
| 55 | 2 | நூறறில் | நூற்றில் |
| 56 | 2 | எல்லாசாம | எல்லாச்சாம |
| ,, | 21 | எல்லாசாம | எல்லாச்சாம |

# முக்கிய குறிப்பு.

வடமொழியும் தென்மொழியும் மாண்புறக் கற்கும் ஆன்றோர்களே! மக்கள் கல்வியுணர் வொன்றனையே மேம்படுகின்றனர். தருக்கநூற் பொருள்களை முன்னர் வெளியிட்டது வடமொழியே. அப்பொருள்களைத் தமிழில் மொழிபெயர்க்கிற் சிற்சிலவிடங்களிற் பலவகையாய் வரைய நேர்கின்றன. வடமொழியைக் கற்கின் அவ்வாறு வரையாமலேயே உண்மையுணரலாம். இவ்விஷயத்தில் ஏனைய நாட்டாரை நோக்குவீர்களாக. இங்ஙனம் வேண்டப்படுவதாயுள்ள வடமொழியை இளையோரும் முதியோரும் வருத்தமின்றிக் கற்பதற்கு சமஸ்கிருத முதற் புத்தகம் பேருபகாரமாக இருக்கின்றது. இப் புத்தகம் வெளிவந்த விபரமாவது:—ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகளின் மாணுக்கர் சி. சுப்பைய சுவாமிகள் க. ஜானகிராம ஐயரிடம் தான் படிக்கும்பொருட்டு ஆங்கிலத்திற்கு மாத்திரம் தமிழ் மொழிகளை எழுதிக்கொண்டு வந்து மடத்திலிருந்து தானே சமஸ்கிருதத்தையுங் கலந்து புஸ்தக ரூபமாய் எழுதி 1916-௵த்தில் முதற் பதிப்பாக அச்சிடப்பட்டுள்ளார்கள். அப்புததகம இப்போது 1936-௵த்தில் இரண்டாம் பதிப்பாக அசசிடப்படுகின்றது. சீக்கிரம் வெளிவரும். படிப்போர்களுடைய பேருபகாரமாகக் குறைந்த எட்டணு விலையிற் கொடுக்கப்படும். இப் புத்தகத்தை சி. சுப்பைய சுவாமிகள் தான் எழுதி அச்சிட்டார்கள் என்பதை முதற் பதிப்பின் முகவுரையில் அனைவருங் கண்டுணர்வீர்களாக. ஆகலின் இச் சமஸ்கிருத முதற் புத்தகத்தை சி. சுப்பைய சுவாமிகளிடமிருந்து பெற்றுச் சீக்கிரம் சமஸ்கிருத பாஷையைப் படித்துத் தருக்க வேதாகம முதலிய பொருள்களை யுணர்ந்துய்யவேண்டி. எல்லாம்வல்ல இறைவன் திருவருளை இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்

மௌ. செ. சுவாமி முக்தானந்தா,

திருவொற்றியூரான் சமஸ்கிருத வித்யாசாலை, சூளை, சென்னை.